# சமுதாயப் பார்வையில் திருமங்கையாழ்வார் சுட்டும் இறைத் தத்துவம்

முனைவர் ஜெ. அரங்கசாமி



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

# சமுதாயப்பார்வையில் திருமங்கையாழ்வார் சுட்டும் இறைத்தத்துவம்

ஆசிரியர்
முனைவர் ஜெ. அரங்கசாமி




தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

ISBN : 81-7090-269-x

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீட்டு எண் : 209

திருவள்ளுவர் ஆண்டு 2031 தை - பிப்ரவரி 2000

| | |
|---|---|
| நூல் | சமுதாயப்பார்வையில் திருமங்கையாழ்வார் சுட்டும் இறைத்தத்துவம் |
| ஆசிரியர் | ஜெ. அரங்கசாமி |
| பதிப்பு | முதற்பதிப்பு |
| படிகள் | 500 |
| விலை | ரூ. 40/- |
| அச்சு | தமிழ்ப் பல்கலைக்கழக அச்சகம் தஞ்சாவூர் - 1. |

## தமிழ்ப் பல்கலைக்கழகம்
### தஞ்சாவூர் - 613 005

முனைவர் கதிர். மகாதேவன்
துணைவேந்தர்

---

### அணிந்துரை

திருமங்கையாழ்வாரை 'மாறன் (நம்மாழ்வார்) பணித்த தமிழ் மறைக்கு ஆறு அங்கம் கூற அவதரித்த திருமங்கை மன்னன்' என்று தனியன் பாராட்டுகிறது. 'பொங்கு புகழ் மங்கையர்கோன் ஈந்த மறை ஆயிரம் அனைத்தும் தங்கும் மனம்', தமக்கு வேண்டும் என முறையிட்டு வேண்டுகிறார், உடையவராகிய இராமானுசர். அத்துணைப் புகழ் சான்ற திருமங்கையாழ்வாரின் பிரபந்தங்கள் ஆறு; அவற்றுள் பெரிய திருமொழி *1084* பாசுரங்களைக் கொண்டது.

இப்போது வெளியாகும் "சமுதாயப் பார்வையில் திருமங்கையாழ்வார் சுட்டும் இறைத் தத்துவம்" என்ற நூல் அவ் ஆழ்வாரின் பாசுரங்கள் அனைத்தையும் தன் ஆய்வுக்குரிய களமாகக் கொள்ளவில்லை பெரிய திருமொழியில் *90* பாடல்களை மட்டும் தம் ஆய்வுக்குத் தேர்ந்தெடுத்து, 'அதன்வழி இவ் ஆழ்வாரது பத்தியின் திறத்தையும் அதனால் பெறப்படும் உண்மைகள் சமுதாய மக்களது இன்பமாய் வாழ எவ்வழிகளில் பயனுடையதாக அமைகின்றன' என்பதை விவரிப்பதாக ஆசிரியர் *(பக்.62)* கூறியுள்ளார் மேற்கொண்ட ஆய்விற்கு ஆழ்வார் அருளிய தொண்ணூறு பாசுரங்களே போதுமா? எல்லை வரையறுத்தது சரிதானா என்ற வினா ஒருபால் எழவே செய்கின்றது; எனினும், ஆய்வாளரின் அளவான முயற்சியைப் பாராட்டுகிறேன்; மேலும், தொடர்ந்து நிறைவு செய்வார் எனவும் நம்புகிறேன்

வைணவ மரபு *(சம்பிரதாயம்)* நெறியில் ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஆராய்ந்து பலர் சிறந்த நூல்களை வெளியிட்டுள்ளனர். அவர்கள் வகுத்த வழியிலேயே சென்று விடாமல் சமுதாயப் பார்வையில் நாட்டம் செலுத்தி, ஈரப் பசுந்தமிழில் பாசுரங்களை ஆராய முற்பட்டிருப்பது வரவேற்கத் தக்கதே. முனைவர் அரங்கசாமி மேற்கொண்ட இம்முயற்சி பாராட்டத் தக்கதே ஆம். திருமங்கையாழ்வாரின் படைப்புப் பாசுரங்கள் பக்தியையே நுவல எழுந்தவை;

இந்நூலாசிரியர் பத்திமைக் கூறுகளோடு திருமங்கை மன்னனுக்குச் சமுதாய நோக்கும் உண்டென்பதைச் சான்றாதாரங்களோடு காட்டிட முயன்றுள்ளார்.

திருமாலை உயர்த்திப் பிற தெய்வங்களைத் தாழ்த்திக் காட்டும் பாடல்களும் அவர்தம் படைப்பில் உண்டு. எனினும், குறைகள் அனைத்தும் குற்றங்கள் அல்ல; நிறைகளைச் சுட்டும்போது சமத்துவம் பேணப்படல் என்ற தத்துவம் மேலோங்கும் என்று இவ் ஆசிரியர் எண்ணினார் போலும்! முற்போக்கு எண்ணங்கள் ஆங்காங்கே தென்பட்டாலும், இறையுணர்வை வலியுறுத்துவதையும், வீடு பேறே முடிவான இலக்கு என்று சுட்டுவதையும் ஆசிரியர் விட்டுவிடவில்லை

பத்திமை ஒருவகை பசனை உணர்வில்லை என்ற இறைத் தத்துவத்தை நெறிப்படுத்தும் முனைவர் அரங்கசாமி அவர்கள் பாராட்டிற்குரியவர். மனித நேயத்தைச் சமய நோக்கில் வலியுறுத்தும் முயற்சி சால நன்று.

*18 8 . 2000*

**(கதிர். மகாதேவன்)**
துணைவேந்தர்

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகில் மக்கள் தங்கள் வாழ்க்கையை நெறிப்படுத்தி வாழ்வாங்கு வாழ்ந்து இறைநிலை அடையக் கிருத்துவம், இசுலாம் மற்றும் இந்து சமயம் ஆகியன சரியான வழிகளைக் காட்டுகின்றன இவற்றில் தத்துவம், இலக்கியம் ஆகியவற்றால் இந்து சமயம் மிகவும் சிறப்புடையதாய் இருக்கின்றது. இந்து சமயத்தில் வைணவமும், சைவமும் அதன் இரண்டு கண்களாக விளங்குகின்றன. இவை இரண்டும் வேதகாலம் தொட்டு இந்தியாவில் தோன்றி, வளர்ந்து, மனித வாழ்க்கையானது இவ்வுலகிலும் இறையுலகிலும் முழுமை அடையத் தேவையான அனைத்து வழிகளையும் காட்டுகின்றன.

இந்து சமயத்தின் அடிப்படை நூல்களான வேதங்களிலும் உபநிடதங்களிலும் வைணவச் சமயத்தின் முழுமுதற் கடவுளான விட்டிணு பற்றிய குறிப்புகள் உள்ளன. இதிகாசங்களும், புராணங்களும் வைணவம் இந்தியா முழுவதும் பரவ உதவியாய் அமைந்தன. தமிழகத்தில் வைணவம் தொல்காப்பியர் காலத்திலேயே சிறந்து விளங்கியமையை, “மாயோன் மேய காடுறை உலகமும்” என்னும் வரியிலிருந்து அறியலாம். இத்தகு தொன்மை வாய்ந்த வைணவக் கருத்துகள் சங்க இலக்கியங்கள் அனைத்திலும் ஆங்காங்கு பரவலாக காணப்பெறுகின்றன. தமிழகத்தின் இருண்ட காலமான களப்பிரர்கள் காலத்தில் சமண பௌத்த சமயங்கள் தழைத்தோங்கி, வைணவம் பின்னிலைக்குத் தள்ளப்பட்டது. ஆனால் அதற்குப் பின்னர் வந்த பன்னிரு ஆழ்வார்கள் வைணவத்தைத் தங்கள் நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தின் மூலம் மீண்டும் தமிழகத்தில் சிறப்படையச் செய்தனர். வைணவச் சமயத்திற்கு முறையான தத்துவத்தை அமைத்துக்கொடுத்த ஸ்ரீ இராமானுசர் இவ்விலக்கியத்தை முதன்மையாக வைத்து வடமொழி இலக்கியங்களை அதற்குச் சார்பாகக் கொண்டமை, இவ்வாழ்வார்களுக்கும், அவர்களது இலக்கியத்திற்கும் பெருமை சேர்ப்பதாக இருக்கின்றது. இவ்விலக்கியத்தின் எளிமை, இனிமை ஆகியவற்றாலும், பக்தன் இறைவனை அறிய எல்லோராலும் கடைப்பிடிக்க உகந்த பக்தி வழியைக் காட்டுவதாலும் இதன் புகழ் போற்றுதற்குரியதாய் அமைகின்றது.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய பன்னிரு ஆழ்வார்களில் நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும்

முதன்மையிடத்தை வகிக்கின்றனர். இவர்களில் நம்மாழ்வாரைப்பற்றியும், அவருடைய இலக்கியங்களைப் பற்றியும் அறிவுலகம் நன்கு அறியும். ஆகவே நம்மாழ்வாரை விடுத்து திருமங்கையாழ்வாரைப் பற்றியும், அவருடைய இலக்கியங்களைப் பற்றியும் இன்றைய நிலையில் ஆராய்வது அறிவுலகத்திற்கு ஏற்புடையதாயும், தேவையுடைய்தாயும் அமையும்

திருமங்கையாழ்வார் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் சோழ மண்டலத்தில் திருவாலி திருநாட்டில் திருக்குறையாலூர் என்னும் ஊரில் ஆலி நாடர் என்று ம் சோழ மன்னனின் படைத்தளபதிக்கும், அவரது மனைவி வல்லீத் திருவிற்கும் மகனாகப் பிறந்தார். இவர் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல், திரு எழுகூற்றிருக்கை ஆகிய பக்தி இலக்கியங்களைப் படைத்துள்ளார் இவையே இவ்வாய்விற்கு அடிப்படை நூல்களாகும்.

நாலாயிர திவ்வியப்பிரபந்தம் வைணவக் கடவுளான திரு நாராயணனது இலக்கணங்கள், உயிர்கள், மற்றும் உலகியலின் தத்துவங்கள் ஆகியன அடங்கிய ஒரு கருத்துப்பெட்டகம். அத்துடன் இவ்விலக்கியம் மனிதன் உலகில் நிறைவுடன் வாழத் தேவையான அறக்கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டிருக்கின்றது. இக்கருத்தினைத் தெளிவாக்கும் வகையில் இதில் கூறப்பெற்றுள்ள இறைவனுடைய இலக்கணங்களை அறிந்து கொண்டால் மக்கள் எங்ஙனம் அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய துறைகளில் மேலோங்கி, அவற்றில் காலத்தால் ஏற்படும் சிக்கல்களைக் களைந்து நன்முறையில் வாழுதல் முடியும் என்பது பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சமுதாயம் என்பது மக்கள் ஒன்றாக இருந்து ஒருவருக்கொருவர் உதவிகள் செய்து, உணவு, உடை, உறையுள் ஆகியவற்றுடன் தங்கள் உடல் தொடர்புடைய, உள்ளத் தொடர்புடைய தேவைகளை நாகரிகத்துடனும் பண்பாட்டுடனும் முழுமை செய்து கொள்வதே ஆகும். இப்பின்னணியில் மக்கள் ஒரு கோட்பாட்டினை ஏற்பதும் அல்லது விடுவதும் அவர்களது மனதின் பண்பட்ட தன்மையின் அடிப்படையில்தான். ஒருவனது மனதின் பண்பட்ட தன்மை அவனது உடல், உள்ள, உயிர்த் தேவைகள் முழுமையடைவதாலும், அவற்றைக் கட்டுப்படுத்துவதாலும் அமைகின்றன என்று கூறலாம். ஒரு சமுதாயத்தில் உடல் தொடர்புடைய தேவைகள் மட்டும் முழுமையடைந்தால் போதும் என்று இருக்கும். ஆனால் அதில் மக்கள் வாழும் வாழ்க்கையை விலங்குகளுடைய வாழ்க்கையுடன் ஒப்புநோக்க வேண்டி வரும். ஒரு சமுதாயம் உடல் மற்றும் உள்ளத் தொடர்புடைய தேவைகள் மட்டும் முழுமையானால் போதும் என்று எண்ணும். ஆனால் அங்கே மக்கள் தேவைகள் அனைத்தும் முழுமையடைகின்றன என்று கூற முடியாது. அதே சமயம், ஒரு சமுதாயத்தில் உடல், உள்ள, உயிர்த் தொடர்புடைய தேவைகள் முழுமையடைகின்றன என்றால்,

அங்கு மக்களுடைய தேவைகள் முழுமை அடைகின்றன என்றும் அதுவே மற்றச் சமுதாயங்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் என்றும் கொள்ளலாம். மனிதனின் உடல் மற்றும் உள்ளத் தொடர்புடைய தேவைகளை அவனுடைய முயற்சியால் நிறைவு செய்துகொள்ள முடியும். ஆனால் அவனுடைய உயிர்த் தொடர்புகளை தேவைகள் அவனது மனம் பண்பட்டு அதன் உள்ளீடாக இருக்கும் ஆன்மாவையும், இறைவனையும் அறிந்து கொள்வதால் மட்டுமே நிறைவடையும் என்பது வெள்ளிடை மலை.

மக்கள் வாழ்க்கையில் சிக்கல்கள் எக்காலத்தும் தோன்றிக் கொண்டே இருக்கும் அவற்றைச் சமுதாயத்தினர் அப்பொழுதைக்கப்பொழுது தீர்த்துக் கொண்டே இருப்பார்கள். இந்நிலையில் சமுதாயத்தில் ஏற்படும் உடல், உள்ளத் தொடர்புடைய சிக்கல்களை அறிவு பூர்வமாக தீர்த்து வைத்தாலும், அவை ஒரு கட்டுப்பாட்டிற்குள் அடங்காமல் மேலும் பல உட்சிக்கல்களை வளர்த்துக்கொண்டே செல்லும். ஆனால் மக்கள் இறைவனை ஏற்று, உயிர் தொடர்புடைய தேவைகளை நிறைவு செய்து கொண்டால், அதனால் கிடைக்கும் மனத்திருப்தியால் அச்சமுதாயத்தில் ஏற்படும் அனைத்துச் சிக்கல்களுக்கும் தீர்வு கண்டு அதனை ஒரு கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடியும். இப்படிப்பட்ட சமுதாயத்தையே முழுமைச் சமுதாயம் என்று அறிவுலகம் ஏற்கும். ஆகவே உலக மக்கள் அனைவரும் இறைவனை ஏற்று, எவ்விதச் சிக்கல்களும் இன்றி இன்பமாய் வாழ வேண்டும் என்று அறிவுறுத்துவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இக்கட்டுரை ஒருசில வரையறைக்குள் அடங்குகின்றது. ஒரு சமுதாயம் வைணவம் போற்றும் திருநாராயணனை இறைவனாக ஏற்றுக் கொள்ளலாம்; அல்லது வேறு சமயத்தைச் சார்ந்து அச்சமயத்தின் இறைவனை வணங்கலாம்; அல்லது இறைத்தத்துவத்தையே ஏற்காமல் மறுக்கலாம். ஆனால் இறைவனை ஏற்று அதன் பின்னணியிலுள்ள அறக்கருத்துகளைக் கடைப்பிடித்தால் மனிதன் சமுதாயத்தில் எவ்விதச் சிக்கலுமின்றி அமைதியாக வாழ முடியும்.

உலகில் ஆத்திக சமயங்கள் தத்துவம், இறைவனை அடையும் வழிகள், வாழ்க்கை முடிவுகள் ஆகியவற்றில் ஒன்றுக் கொன்று முரண்பட்டு நிற்கும் ஆனால் இறைவனை முன் வைத்து மனிதச் சமுதாயம் வாழ வேண்டும் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அவை ஒன்றுபடும். ஆகவே திருமங்கையாழ்வார் சுட்டும் திருநாராயணனைச் சமயக் கண்ணோட்டத்தில் நோக்காமல், சமுதாயப்பார்வையில் அனைவரும் ஏற்கும் இறைவனாகக்கொண்டு, மக்களுக்கு ஏற்படும் சிக்கல்களையும் அவற்றைத் தீர்க்கும் வழிகளையும் இக்கட்டுரை ஆராயப் புகுகின்றது.

இக்கட்டுரை ஐந்து அதிகாரங்களைக் கொண்டுள்ளது. முதல் அதிகாரத்தில் திருமங்கையாழ்வார் கூறும் திருநாராயணனுடைய

இலக்கணங்கள் பற்றிச் சமுதாயப் பார்வையில் ஆராயப்பெற்றுள்ளன. அதில் திருநாராயணன் பரம பதம் எனும் ஸ்ரீவைகுண்டத்தில் இருக்கும் நிலையையும், அவன் சமுதாயத்தின் உள்ளீடாக இருக்கும் நிலையையும் சுட்டி, பின் அவன் சமுதாயத்துடன் நெருங்கியிருக்கும் பொழுது கொண்டுள்ள குணநலன்கள் விவரிக்கப்பட்டுள்ளன. இரண்டாவது அதிகாரத்தில் இறைவனுக்கும் தனிமனிதனுக்கும் உள்ள தொடர்வு விவரிக்கப்பெற்றுள்ளது. மூன்றாவது அதிகாரத்தில் இறைவனுக்கும் சமுதாயத்திற்கும் இடையிலான தொடர்பு தெளிவுறுத்தப்பெற்றுள்ளது. அதில் ஒரு சமுதாயத்திற்கு மொத்தமாக ஏற்படும் சிக்கல்கள் ஆராயப்பட்டு, மக்கள் இறைவனை முன்வைத்து வாழ்ந்தால் எங்ஙனம் அவற்றிற்கு முடிவு காண முடியும் என்பது ஆராயப்பெற்றுள்ளது. நான்காவது அதிகாரத்தில் இறைவன் உலகில் அவதாரங்கள் எடுப்பதன் நோக்கம் விவாதிக்கப்பெற்றுள்ளது. அதில் இறைவனின் அவதார விளக்கம், அதன் காரணம், அவன் எடுத்த அவதாரங்களின் பின்னணி, அதனால் உலகோர் அடையும் நன்மைகள் ஆகியன விளக்கம்பெற்றுள்ளன. ஐந்தாவது அதிகாரத்தில் திருநாராயணன் அர்ச்சை அல்லது பூசைத்திருமேனிகளாகப் புண்ணியத் திருநகரங்களில் கோயில் கொண்டுள்ளமை பற்றி ஆராயப்பெற்றுள்ளது. அதில் திருமங்கையாழ்வார் பூசைத்திருமேனியை வணங்கும் பாடல்கள் அமைந்திருக்கும் முறைகளைப் பற்றியும் அவர் நேரடியாகவும், நாயகியாகவும், நாயகியின் தாயாகவும் நின்று இறைவனைத் துதிக்கும் தன்மைகளைப்பற்றியும் அவற்றின் உள்ளீடாக அமைந்துள்ள தத்துவங்கள் பற்றியும் ஆராய்ந்து, அவை மனித வாழ்க்கையை மாற்ற எங்ஙனம் உதவும் என்ற கருத்தும் தெளிவாக்கப்பெற்றுள்ளன. முடிவுரையில் ஆய்வின் முழுமையையும் சுருக்கி, இவ்வாழ்வார் காட்டும் இறைவனை மக்கள் அறிந்து கொண்டால், எங்ஙனம் அவர்கள் வாழ்க்கை தன்னிறைவு பெறும் என்பது சீர்தூக்கிப் பார்க்கப்பெற்றுள்ளது.

# நன்றியுரை

"நற்றுணை யாகப் பற்றினே னடியேன்
நாராய ணாவென்னும் நாமம்"

என்ற வகையில் இறைவன் திருவருள் கூட்டுவிக்க இந்நூல் எழுத ஆட்படுத்திய அந்நாள் தத்துவ மைய இயக்குநர் முனைவர் பி.கே. சுந்தரம் அவர்கள் போற்றிகளாகவும், துதிகளாகவும் இறையின்பக் கருவூலங்களாகவும் இருக்கும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை இன்றைய சமுதாய நோக்கில் ஆராய்வது மனிதக் குலத்திற்குப் பயனுடையதாய் அமையும் என்றக் கருத்தை வலி யுறுத்தினார்கள். அவ்வகையில் அமைந்த அப்பெரியாரது எண்ணத்திற்கு இணங்க இவ்வாராய்ச்சி என்னால் மேற்கொள்ளப்பெற்றது.

"காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"

என்னும் திருவள்ளுவரின் வாக்கின்படி, இந்நூல் முழுமைபெறப் பல வழிகளிலும் உதவிகள் புரிந்த பெரியோர்களை வணங்கி மகிழ்வது என் கடமையாகும். இவ்வகையில் இத்தனிவரைவு நூலின் அணுகுமுறைக்கும், கருத்துச் செறிவிற்கும் தக்க பல ஆலோசனைகளை வழங்கிய முனைவர் பி.கே. சுந்தரம் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அத்துடன் எனக்கு ஆய்வில் சந்தேகங்கள் ஏற்படும் பொழுதெல்லாம் அவற்றைத் தக்க முறையில் தீர்த்து வைத்துக் கட்டுரை முழுவதையும் படித்துச் செப்பனிட்டுக் கொடுத்த இம்மையச் சிறப்பாய்வாளராக இருந்த முனைவர் இரா. கோலப்பப்பிள்ளை, கௌரவப் பேராசிரியராக இருந்த மகாவித்துவான் அருணைவடிவேல் முதலியார் மற்றும் காஞ்சிபுரம் வித்துவான் நாராயண வேலுப்பிள்ளை ஆகியோர்களுக்கு என் நன்றியைச் செலுத்திக் கொள்கிறேன்.

மேலும் என் உள்ளத்தே சாட்சியாய் இருந்து, என்னை வழி நடத்தும் இறைவனைப்போல அறக்கருணையாலும் மறக்கருணையாலும் என் ஆராய்ச்சிக்கு ஊக்கம் கொடுத்த தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கும் அக்காலகட்டத்தில் பதிவாளராக இருந்த மாண்புநிறை முனைவர் பெ. சின்னையன்

அவர்களுக்கும் என் நெஞ்சு நெகிழும் நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

நான், தாய்வீடாம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மாணவனாகவும், ஆய்வாளனாகவும் இருக்கும் காலங்களில் நேரடியாக வழிப்படுத்தியும், பிறகு தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பணிபுரிகின்ற காலத்தில் தொலைவில் இருந்து கொண்டு ஆய்வு மற்றும் பல்வேறு நிலைகளில் தோன்றாத் துணையாக நின்றும், பிறகு தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராக இருக்கும் நிலையில் நேரடியாக பணிநிலையில் அறிவுரை மற்றும் ஆணைகள் வழங்கியும் என்னை நெறிப்படுத்திக் கொண்டிருக்கும் மாண்புமிகு துணைவேந்தர் முனைவர் கி. கருணாகரன் அவர்களுக்கு என் நன்றி எக்காலத்திற்கும் உரியதாக அமையும். மேலும் ஆய்வு மற்றும் தனிப்பட்ட வகைகளில் எனக்கு அறிவுரைகளையும் உதவிகளையும் வழங்கி இந்நூல் இவ்வகையில் அமைய உதவிய இந்நாள் இயக்குநர் முனைவர் க. பாஸ்கரன் அவர்களுக்கும் இந்நூல் இறுதி மெய்ப்பாக்க நிலைவரை அனைத்து நிலைகளிலும் உதவிய என் ஆய்வு மாணவி செல்வி சி. பேபி சித்ராவிற்கும் என் நன்றி உரித்தாகுகிறது.

ஜெ. அரங்கசாமி

# இறைவனுடைய இலக்கணங்கள்

சமுதாயத்தில் பொதுவாக அனைவரிடத்தும் இறையுணர்வானது இயற்கையாக அமைந்து அவர்களின் அறிவுக்கேற்ற வகைகளில் உலகியலில் வெளிப்படுகின்றது. இதற்குத் தூண்டுகோலாக அமைந்திருப்பவை நம் ஆன்றோர்களின் வாழ்க்கை முறைகளும் அவர்கள் சமுதாயத்திற்காக விட்டுச்சென்ற இலக்கியங்களுமாகும். இவற்றில் திருமங்கையாழ்வாருடைய பக்தி இலக்கியங்களை ஆராயும்பொழுது, அவர் இறைவனைச் சமுதாயம் கடந்து இருக்கின்ற நிலை, சமுதாயத்தின் உள்ளீடாக இருக்கின்ற நிலை என இரண்டு நிலைகளில் கண்டு அவனுடைய இலக்கணங்களை விளக்குகின்றார். முந்தைய நிலையில் இறைவன் ஸ்ரீமன்நாராயணனாகத் தன் திருநாட்டில் நன்மை - தீமை, வெற்றி - தோல்வி, விருப்பு - வெறுப்பு, துன்பம் - இன்பம், பிறப்பு - இறப்பு, தோற்றம் அழிவு எனும் இருவேறுபட்ட குணங்களைத் தாண்டி, அனைத்து மங்கள குணங்களுடன் நித்திய சூரிகள் புடைசூழ ஆனந்தப் பரவச நிலையில் உறங்காமல் உறங்கி யோக நித்திரையில் பள்ளிக்கொண்டு இருக்கின்றான். இதனைத் திருமங்கையாழ்வார்,

" . . . . . . . . . . . . . . . . . . மூவர்
மூவுலகம் கடந்தப்பால் முதலாய் நின்ற
அளப்பரிய ஆரமுதை"[1]

என்றும்,

உறவு சுற்றமென் றுஒன்றிலா வொருவன்[2]

என்றும்,

பிறப்பொடு மூப்பொன் றில்லவன்[3]

என்றும் தெளிவாக விளக்குகின்றார். பிந்தைய நிலையில் திருநாராயணன் தன் திருநாட்டிலிருந்து கீழிறங்கி வந்து சமுதாயத்தின் உள்ளீடாகவும் உயிர்களுக்குள் உயிராகவும் கோயில்களில் வழிபடும் பூசைத் திருமேனியாகவும்

அவ்வக்காலங்களிலே அவதாரங்களெடுத்து, மக்கள் நன்னெறியடைய அவர்களிடையே பிறந்து அவர்களைப் போலவே வாழ்ந்து காட்டி, அவர்களுக்கு அறிவொளியூட்டுகின்றான். இக்கருத்தினை இவ்வாழ்வார்,

"குவலயத் தோர்தொழு தேத்தும்
ஆதியை, யமுதை, என்னை யாளுடை
அப்பனை - ஒப்பவ ரில்லா
மாதர்கள் வாழும் மாடமா மயிலைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.[4]

என்று திருவல்லிக்கேணி பார்த்தசாரதியை வணங்கும் பாடலில் விளக்குகின்றார். இதனை விவரித்துக் காணும்பொழுது, உலகத்தோர் வணங்கும் ஸ்ரீமன்நாராயணன் அமுதினைப் போன்று இனிமையானவன், அவன் பக்தர்களின் உள்ளத்தின் உள்ளீடாக இருந்து அவர்களை ஆட்கொள்பவன் என்ற கருத்துகள் தெளிவாகின்றன. அப்படிப்பட்ட இறைவனை, ஒப்புமை சொல்ல முடியாத வகையிலே, பெண்கள் இன்பமாய் வாழுகின்ற திருவல்லிக் கேணியில் கண்டேன் என்று ஆழ்வார் அவனுக்குப் புகழாரம் சூட்டுகின்றார். இதனை நோக்கும்பொழுது திருக்கோவில்களில் பூசைத்திருமேனியாய்க் குடிகொண்டிருக்கும் இறைவன் பக்தர்களின் வாழ்க்கையோடு நீக்கமற நிறைந்து அவர்களுக்கு வழிகாட்டுகின்றான் என்ற உண்மை பெறப்படுகின்றது.

ஸ்ரீமன்நாராயணனது திருநாட்டிலுள்ள நித்திய முத்தர்களான விட்வக்சேனன்; கருடன் போன்றவர்களும், பக்தியின்வழி வினைப்பயன் நீங்கிய முக்தர்களும் இறையானந்தத்தை எவ்விதக் குற்றமும் இன்றி நிறைவாக அருந்தி இன்புறுகின்றார்கள். ஆனால் சமுதாயத்தில் குற்றங்களும் குறைகளும் இருப்பதால் மக்கள் முழுமையான இன்பத்திற்குப் பதிலாக அத்துடன் துன்பத்தையும் சேர்த்தே அனுபவிக்கின்றனர். இந்நிலையில் திருமங்கையாழ்வார் புலன் கடந்த பரமனைப் பாவனையால் நினைப்பதை விட, நமது புலன்களுக்கு எட்டுகின்ற நிலையிலே ஆங்காங்குக் கோயில்களில் எழுந்தருளியுள்ள பூசைத்திருமேனிகளைப் பணிந்து, துதித்து, பக்தி செய்து இன்புறுவதே சாலச்சிறந்ததது என்கின்றார். இதற்கு,

"ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே"[5]

என்ற சிறிய திருமடல் வரி சிந்திக்கத் தக்கதாய் உள்ளது. ஆகவே இதனைக் கருத்திற்கொண்டு சமுதாயத்திலுள்ள தீமைகளை அகற்றி, இறைவனுடைய திருநாடு போன்று இங்கும் இன்பமே நிலைத்திருக்க வேண்டும் என்றக் கருத்தின் அடிப்படையில் இவ்வாழ்வார் கூறும் இறைவனுடைய இலக்கணங்களை ஈண்டுக் காண்போம்.

இவ்வாழ்வார் இறைவன் அனைவருக்கும் பொதுவானவன் என்றும், அவனிடத்து அன்பு செய்யும் பக்தர்களிடத்து அவன் உள்நின்று அனைத்து வழிகளிலும் உதவுகின்றான் என்றும், இறைவனை நம்பி நேர்வழியில் வாழ்க்கையை அமைத்துக் கொள்பவர்கள் யாராயினும் அவர்களுக்கு அவன் அனைத்து நலன்களையும் குறைவின்றி நல்குகின்றான் என்றும் கூறுகின்றார்.

இவர் இறைவன்பால் பக்தி செலுத்துபவர்களுக்கு அவனுடைய நாமமே உயர்ந்த குலம், செல்வம், வலம் மற்றும் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து நலன்கள் ஆகியவற்றைப் பெற்ற தாயினைப் போன்றப் பரிவுடன் கொடுக்கும் என்றும், அதுவும் வாழ்க்கையில் தளர்ச்சியுற்றவர்களுக்கு விரைந்து வந்து கொடுக்கும் என்றும் கூறுகின்றார்.

"குலந்தரும் செல்வந் தந்திடும் அடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்"[6]

என்ற பாடலிலே இக்கருத்தை இவ்வாழ்வார் வெளிப்படுத்துகின்றார்.

திருமங்கையாழ்வாருடைய இலக்கியங்களை ஆராயும் பொழுது அவை உலகம் கடந்த நிலையில் பரமபதத்தில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனுக்கும் இப்பூவுலகின் ஒவ்வோர் அணுவின் உள்ளீடாக இருக்கும் அவனது அந்தரியாமி நிலைக்கும் ஒரு பாலமாக இருக்கின்றன. இவர் உலகத்தின் உள்ளீடாக இருக்கும் இறைவனைப் போற்றும் நிலையிலே உலகம் கடந்த நிலையில் இருக்கும் இறைவனையும் போற்றிப் பரவுகின்றார். இவ்வாழ்வார் உலகின் உள்ளீடாக இருக்கும் இறைவனின் எளிய உருவமான பூசைத்திருமேனிக்கே அதிக முக்கியத்துவம் கொடுப்பது இவருடைய பாடல்களின் போக்கிலிருந்து தெரிய வருகின்றது. பூசைத்திருமேனியை உலகில் உள்ளோர் அனைவருக்கும் எவ்வித வேறுபாடுமின்றிக் கண்டு வணங்க முடியும். இவ்வாழ்வார் பூசைத்திருமேனியைப் போற்றுவதோடு இறைவனின் விழாத் திருமேனியையும் போற்றும் வகையிலேயும் அவருடைய பாடல்கள் அமைந்திருக்கின்றன என்று நாம் கொள்ள இடமுண்டு. இப்பாடல்களில் இவ்வாழ்வாருடைய சமுதாயப் பார்வையின் மேன்மை வெளிப்படுகின்றது உடல் குறைபாடுடையவர்களும், வயது முதிர்ந்தவர்களும், நோய்வாய்ப்பட்டவர்களும் இறைவனைக் கோவில்களில் சென்று வணங்க முடியாது. அதற்காகவே இறைவனுக்கு விழாத்திருமேனி என்று கொண்டு அதனை வீதி உலாவிற்கு எடுத்து

வரும்பொழுது மேற்கூறியவர்கள் அதனைக் கண்டு பக்தி செய்கிறார்கள் மேலும் திருமங்கையாழ்வார் காலத்தில் இழிகுலத்தோர் என்று கருதப்பட்டு வந்த சூத்திர வகுப்பினரும் அவர்கள் கோவிலின் உட்புக முடியாத சமுதாயத் தடை இருக்கும்பொழுது, மேற்கூறிய விழாத்திருமேனியை வீதி உலாவில் அவர்கள் கண்டு இறையின்பத்தை அருந்தி இன்புற்றார்கள். ஆகவே ஈண்டு இறைவன் சமுதாயத்திலுள்ள அனைவருக்கும் பொதுவானவனாய் இருக்கின்றான் என்பதும் அவனை இவ்வாழ்வார் தம் பாடல்களின் மூலம் உலகத்தோருக்குப் பொதுவாகக் காட்டிட முனைந்தார் என்பதும் அவருடைய பனுவல்களின் உட்கருத்துக்களிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றன. அத்துடன் இவ்வாழ்வாருடைய காலத்தில் பொற்கொல்லன், தச்சன், வேள்வி செய்பவர்கள், இசையிசைப்பவர்கள் போன்ற அனைத்து வகுப்பினரும் கோவிலைச் சுற்றியே வாழ்ந்து வந்தனர் என்பதும் புலப்படுகின்றது. இதற்கு,

"அருமறையின் திரள்நான்கும் வேள்வி யைந்தும்
அங்கங்கள் அவையாறும் இசைகள் ஏழும்
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மின் நீரே"[7]

என்ற இவ்வாழ்வாருடைய வரிகளிலிருந்து அறிந்து கொள்ளலாம். நடன மாதர்களும், இசைக் கலைஞர்களும் கோவிலை ஒட்டிய பகுதியிலேயே வாழ்ந்திருக்கின்றார்கள் என்ற செய்தியை,

முறையால் வளர்க்கின்ற முத்தீயர், நல்வேதர்
ஐவேள்வி, யாறங்கர், ஏழி னிசையோர்
மறையோர் வணங்கப் புகழெய்தும் நாங்கூர்
மணிமாடக் கோயில் – வணங்கென் மனனே[8]

என்ற வரிகளிலிருந்து அறிந்து கொள்ளலாம். கோவிலைச் சுற்றி நடன மாந்தர்களும், இயல், இசை, நாடகம் ஆகிய துறைகளில் பயிற்சி பெற்றவர்களும் வாழ்ந்திருக்கின்றனர் என்பதை,

"படஅர வல்குல் பாவைநல் லார்கள்
பயிற்றிய நாடகத் தொலிபோய்
அடைபுடை தழுவி யண்டம்நின் றதிரும்
திருவெள்ளி யங்குடி – அதுவே"[9]

என்ற வரிகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம். கோவில்கள் கட்டிடக் கலைக்கும், சிற்பக்கலைக்கும் எடுத்துக்காட்டாக விளங்கின என்ற உண்மையை,

"செம்பொன் மணிமாடங்கள் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர்மின்களே"[10]

என்ற வரிகளில் வரும் அகச்சான்றுகளை ஆராய்வதால் நாம் அறியலாம். சுருங்கக் கூறின், திருமங்கையாழ்வார் காலத்தில் நேரடியாகவோ மறைமுகமாகவோ கோயிலைச் சுற்றியே சமுதாய வாழ்க்கை அமைந்திருந்தது என்பது இவருடையப் பக்தி இலக்கியங்களை ஆராய்வதால் அறியலாம்.

இவ்வாழ்வார் தம் இலக்கியத்தில் இறைவன் தானே உலகமாயும் உயிருள்ள, மற்றும் உயிரற்றப் பொருள்களாயும் மாறியிருக்கின்றான் என்று கூறுகின்றார். இதனை இவ்வாழ்வார்,

"யாவருமாய் யாவையுமாய் எழில்வேதப் பொருள்களுமாய்
மூவருமாய் முதலாய மூர்த்தியமர்ந் துறையுமிடம்"[11]

என்றும்,

"விண்ணும் மலையும் வேதமும் வேள்வியும் ஆயினான்"[12]

என்றும் கூறுகின்றார். இக்கருத்தினை ஆழ்ந்து நோக்கும்பொழுது இறைவனே உலகத்து உயிர்களாக மாறி, அவனே அவற்றை நல்வழிப்படுத்துகின்றான் என்ற உண்மை தெளிவாகின்றது.

இவ்வாழ்வாருடைய கருத்துப்படி இறைவனே உலகமாக விரிந்து ஆங்கிருக்கும் உயிர்களாக மாறியுள்ளான். இறைவனே எல்லாம், அவன் இல்லாத இடம் இல்லை. இதனைச் சமுதாய நோக்கில் ஆராயுமிடத்து இறைவனே சமுதாயமாக இருக்கின்றான் என்ற கருத்தும் அங்கு நடக்கும் அனைத்துச் செயல்களுக்கும் அதனால் சமுதாயம் பெறும் நன்மைகளுக்கும் அவனே அடிப்படைக் காரணமாய் இருக்கின்றான் என்ற கருத்தும் தெளிவாகின்றன. இக்கருத்தை வேறுவிதமாக நோக்கும் பொழுது, இறைவன் சமுதாய இயக்கத்தின் பின்னணியாக இருப்பது புலப்படுகின்றது. இந்நிலையில் சமுதாயத்தின் உள்ளீடாக நடக்கும் செயல்களுக்கும், மனிதனுக்கும் எவ்விதத்திலும் தொடர்பும் இல்லை என்று கூற முடியாது. ஏனெனில் அவன் இயற்கையாகவே சமுதாயத்துடனும், அதன் நிகழ்ச்சிகளுடனும் நேரடியாகத் தொடர்பு கொண்டிருக்கின்றான். இறைவன் மனிதனின் உள் நின்று சமுதாய இயக்கங்களைக் கட்டுப்படுத்துகின்றான் என்பதால் சமுதாயத்திற்கும் மனிதனுக்கும் இறைவனாலன்றி நேரடியாகத் தொடர்பு இல்லை என்று கூறி விட முடியாது. மனிதனின் உள்ளீடாக அவனுக்கென்று தனிப்பட்ட விருப்பமும் உண்டு. அதன்வழி உலகச் செயல்களுக்கும் மனிதன் காரணமாகின்றான். சுருங்கக் கூறின், இறைவனே அறிவுள்ள, அறிவற்ற உயிர்களாய் இருந்து

சமுதாய நிகழ்ச்சிகளுடன் தொடர்பு கொண்டாலும், மனிதனும் சமுதாயத்துடன் நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ளான் என்று முடிவுறுத்துதல் பொருத்தமுடையது.

இறைவனிடத்தில் ஊழிக்காலத்தில் தூல நிலையிலுள்ள உயிருள்ள மற்றும் உயிரற்ற பொருள்கள் அனைத்தும் சூக்கும நிலையில் ஒடுங்கும் என்ற உண்மையைக் கூறும் வரிகள் இவ்வாழ்வாருடைய இலக்கியத்தில் நிறைய உள்ளன இதற்கு,

"பாரெழு கடலெழு மலையெழுமாய்ச்
சீர்கெழும் இவ்வுல கேழுமெல்லாம்
ஆர்கெழு வயிற்றினில் அடக்கிநின்றங்கு
ஒரெழுத் தோருரு வானவனே!,"[13]

என்ற வரிகளை எடுத்துக்காட்டாகக் கூறலாம். இக்கருத்தினை ஆராயும் பொழுது இறைவன் உலகத்தோருக்குப் பொதுவானவன் என்ற உண்மை நிருபிக்கப்படுகின்றது இவ்வாழ்வார் இக்கருத்தை வேறு வழிகளிலும் எடுத்துரைக்கின்றார் அறிவு அனைவர்க்கும் பொது, அறிய முற்படுபவன் யாராயிருப்பினும் அவன் அதனை அடைகின்றான். இவ்வாழ்வார், அறிவு என்ற குணத்தை இறைவனுடன் நேரடியாகத் தொடர்பு படுத்தாமல் அதனை வெளிப்படுத்தும் வேதமாகவும் உபநிடதமாகவும் குறித்து அதன்வழி அறிவிற்கு மூலமான இறைவனை,

"சந்தோகன் பௌழியஞ் ஐந் தழலோம்பு
தைத்திரியன் சாம வேதி"[14]

என்று விளித்து அறிவு அனைவருக்கும் பொதுவாவதைப் போல இறைவனும் பொது என்ற உண்மையை நிலைநாட்டுகின்றார்

இவ்வாழ்வார் இறைவன் பக்தர்களின் பத்திக்குக் கட்டுப்பட்டவன் என்றும் அவனது பெருமையையும் அருள் குணத்தையும் அறிந்து அவனிடம் பக்தி செய்தால் அவன் அவர்களுக்கு அனைத்து நலன்களையும் வழங்கி இன்பம் அளிப்பான் என்றும் எடுத்தியம்புகின்றார்.

இதனை,

"ஒதி ஆயிர நாமங்க ளுணர்ந்தவர்க்
குறுதுயு ரடையாமல்
ஏத மின்றிநின் றருளும்நம் பெருந்தகை"[15]

என்றும்,

"... . . தொண்டர் பாடி யாடக் கூடிடில் நீள் விசும்பில்
அண்ட மல்லால் மற்றவர்க்கோர் ஆட்சி யறியோமே"[16]

என்றும் இவர் இயம்புகின்றார். இறைவன் பக்தர்களது பக்திக்குக் கட்டுப்பட்டவன் என்ற கருத்தும் பக்தியுடன் இறைவனை வணங்கினால் பக்தர்கள் அவனிடமிருந்து வேண்டுவன பெறுவார்கள் என்ற கருத்தும் சமுதாயத்துடன் நெருங்கிய தொடர்பைக் கொண்டுள்ளன. திருமங்கையாழ்வார் ஒவ்வொருவரும் இறைவனின் இருப்பை ஏற்று அவனிடம் பக்தி கொண்டு அறத்தின்வழி இறைவாழ்க்கை வாழ வேண்டும் என்று கருதுகின்றார். இவ்வாழ்வார் மக்கள் அனைவரும் இறைவனிடம் பக்தி செய்பவர்கள் என்பதால் அவர்கள் அனைவரும் ஒற்றுமையாய் இருந்து வாழ்க்கையின் அனைத்து இன்பங்களையும் அனுபவிப்பார்கள் என்று எண்ணுகின்றார். மேலும் அவர்கள் இவ்வுலகில் ஒற்றுமையாயும், இன்பமாயும் இருந்து நேர்மையான வர்ழ்க்கை வாழ்வதால் நீள்விசும்பென்னும் வீட்டுநிலையை எளிதில் வெறுவார்கள் என்றும் இவ்வாழ்வார் நினைக்கின்றார். ஆகவே சமுதாயத்தில் உருவாகும் அரசியல் மற்றும் பொருளாதாரச் சிக்கல்களை, இறைவன் அனைவருக்கும் பொதுவானவன் என்ற கருத்தை மையமாக வைத்துத் தீர்த்துக்கொள்ள முனைவது ஏற்புடையது என்று இவ்வாழ்வார் எண்ணுகின்றார் என்று நாம் கொள்ளலாம்.

பக்தியின் அடிப்படையில் இறைவன் அனைவரையும் சமநிலையிலேயே நோக்குகின்றான். சமுதாயத்தில் அனைவரும் பக்தியின்வழி இறையின்பத்தை அனுபவிக்கலாம். இறைவன் பக்தர்களில் உயர்ந்தவன் - தாழ்ந்தவன், ஏழை - ஏற்றமுடையோன், ஆண் - பெண் என்ற வேறுபாடுகளைக் காண்பதில்லை. பக்தன் மற்றும் பக்தியை ஏற்றுக்கொள்பவன் என்ற இரண்டு நிலைகளுக்கு இடையில் எவ்விதத் தடைகளும் இல்லை. இக்கருத்தின் அடிப்படையிலே இவ்வாழ்வார் இறைவனை வழிபடுகிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் தங்கள் வினைப்பயனை நீக்கி இம்மையில் பல நலன்களைப் பெற்று மறுமையில் வீடுபேறு அடைவர் என்பதை,

"பண்டமாய்ப் பாடும் அடியவர்க் கெஞ்ஞான்றும்
அண்டம்போய் ஆட்சி யவர்க்கு; அது அறிந்தோமே"[17]

என்றும்,

"ஒலிகெழு பாடல் பாடி உழல்கின்ற தொண்டர்
அவராள்வ ரும்ப ருலகே"[18]

என்றும் தெளிவாகக் கூறுகின்றார். மேற்கூறிய பாடல்களைப் பார்க்கும் பொழுது திருமங்கையாழ்வார் இறைவனிடம் அனைவரும் பக்தி செய்ய வேண்டும்

என்றும், அதனால் பக்தர்கள் இவ்வுலகிலும் உம்பருலகிலும் நீடுழி வாழ்வார்கள் என்றும் கூறுவன தெளிவாகின்றன. இதனை ஆராயும்பொழுது, இறைவாழ்க்கை வாழ்வதால் பக்தர்கள் தீய செயல்களைச் செய்ய மாட்டார்கள் என்றும், தீயதை எண்ணமாட்டார்கள் என்றும், நாம் கொள்ளலாம். ஒருவனுடைய மனம் இறைவனை வணங்கிப் பண்பட்டு விட்டால் அங்குத் தீய எண்ணங்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு இருக்காது. அவர்கள் இவ்வுலகில் நேர்மையான வாழ்க்கை வாழ்வதால் தாங்கள் இறந்த பின்னர்ச் சென்று சேரும் உலகைப்பற்றிச் சிறிதும் சிந்திக்க வேண்டிய அவசியம் இருக்காது. அவர்கள் இவ்வுலக வாழ்க்கையை முடித்தவுடன் எவ்விதத் தடைகளும் இன்றி இறையுலகைச் சென்று சேருவர். மேற்கூறிய விளக்கத்தை ஆராயும்பொழுது இறைவன் சமுதாயத்தின் உள்ளீடாக இருந்து மக்கள் நேர்மையான வழிகளில் வாழ்வதற்கான வசதிகளையும் வாய்ப்புகளையும் தங்குதடையின்றியும் வேறுபாடுகளின்றியும் நல்குகின்றான் என்பது தெரிகின்றது. அத்துடன் அவ்வாய்ப்புகளை பயன்படுத்துவதும், பயன் படுத்தாமல் தீய வழிகளில் வாழுவதும் தனிமனிதனது சொந்த விருப்பம் என்ற கருத்தும் அதன் உள்ளீடாக தொக்கி நிற்கின்றது.

இவ்வாழ்வார் இறைவனைப் பற்றி விவரிக்கும்பொழுது இரண்டு சிறப்பான குணங்களை முன்மொழிகின்றார். அவை: *1.* வாழ்க்கையில் மனிதன் குற்றங்கள் செய்திருப்பினும் அவன் மனம் திருந்தி இறைவனிடம் சரணடைந்தால் இறைவன் அவனை மன்னிப்பான். *2.* இறைவன், பக்தன் நல்வினை பெற்றிருப்பின் நேரடியாகவும் தீவினை கொண்டிருப்பின் மன்னித்து நல்வழிப்படுத்தி மறைமுகமாகவும் அருள்பாலித்து வீட்டு நிலையை வழங்குகின்றான். இக்கருத்துகளை இவ்வாழ்வார்,

> ". . . . . . . . . . . . . தீவினைகள்
> தீர்ந்தேன் நின்னடைந்தேன் . . . . . ."[19]

என்றும்,

> "நின்ற வினையும் துயரும் கெடமா மலரேந்தி
> சென்று பணிமின் எழுமின், தொழுமின், தொண்டீர்காள்"[20]

என்றும் கூறும் வரிகளிலிருந்து தெளியலாம்

மக்கள் அனைவரும் நல்லவர்களாகவே இருந்துவிட்டால் சமுதாயத்தில் எவ்விதச் சிக்கல்களும் ஏற்படுவதற்கு இடமில்லை. ஆனால் அங்கு ஏழைமையால், அறியாமையால், சூழ்நிலையால், பொருளின்பால் கொண்ட பற்றுதலினால் தீயவர்கள் உருவாகி தீய செயல்கள் நடைபெறுகின்றன தீயவர்களையும் அவர்களுடைய பின்னணியையும் ஆராய்ந்து பார்த்தால்

மனிதன் தீயதைச் செய்து தீயவர்களாக மாறுவதற்கு அவர்களது வாழ்க்கைச் சூழ்லும் சமுதாயத்தின் அமைப்புகளுமே காரணமாகின்றன. அதே சமயம் தீயவன் நல்லவனாக மாற முடியாது என்று வரன்முறை கிடையாது. தீயவன் அவன் தன் மனக்கட்டுப்பாட்டினாலும், நேர்மையாய் வாழ்வதால் ஏற்படும் துன்பங்களை மனமுவந்து ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தாலும் நல்லவனாக மாறிவிடலாம். தீயவன் நல்லவனாக மாறும்பொழுது உண்மை, நேர்மை ஆகியவற்றைக் கடைப்பிடிப்பதுடன் அவன் தனக்கும் மேலான இறைவனைப்பற்றிச் சிந்தித்து, அவனது பெருங்கருணையின் மேன்மையை அறிந்துகொள்ளும் நிலைக்கு உயர்ந்து விடுகின்றான். ஆகவே பக்தன் நேர்மையானவனாய் இருப்பின் நேரடியாக இறைவனடி சேருகின்றான். அதே சமயம் அவன் தீயவனாக இருப்பின் இறைவன் அவனது சுற்றுப்புறச் சூழலையும் அவனது மனத்தையும் மாற்றி நல்லவனாக்கி, பின்னர்த் தன் பெருங்கருணையால் அவனை ஆட்கொள்ளுகின்றான்.

இறைவன், ஒருவன் தன்னலம் கொள்வதையும், அதிகார வேட்கைக்கு ஆட்படுதலையும் அறவே வெறுக்கின்றான். அவன் பொதுநல நோக்கில் அன்பின் வழி வாழ்கின்றவர்களை நனிவிரும்புகின்றான். இறைவனது அருள் நிலையையுணர்ந்து அவனிடம் அன்பு செலுத்துபவருக்கு அனைத்து நலன்களையும் அருளுகின்றான் இவ்வாழ்வார் இக்கருத்தின் அடிப்படையில் தாம் பெற்ற இறையுணர்வுப் பண்பை அனைவரும் பெற வேண்டுமென்று தன் அனுபவத்தைப் பக்தி இலக்கியமாக உலகத்தோருக்கு நல்கியுள்ளார். மேலும் அன்பின்வழி உலகத்தோா வாழ வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தின் அடிப்படையில், தாம் இறைவனை வழிபட்டு உய்வுற்றமை போன்று மற்றவர்களும் உய்வுற வேண்டுமென்று எண்ணுகின்றார். இதனை இவ்வாழ்வார்.

"துஞ்சும்போ தழைமின்; துயர்வரில் நினைமின்;
துயரிலீர் சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடைய வினைக்கு
நாராய ணாவென்னும் நாமம்"[21]

என்ற வரிகளில் எடுத்தியம்புகின்றார். சமுதாயப் பார்வையில் மேற்கண்ட கருத்துக்களை ஆராயும்பொழுது சில உண்மைகள் புலனாகும். மனிதன் தன்னலத்தையும், அதிகார வேட்கையையும் கொண்டிருப்பின் அவனும் அவனை உள்ளடக்கிய சமுதாயமும் சிக்கல்களின்றி நன்முறையில் இயங்காது ஒருவன் தன் ஆன்மாவையும், ஆன்மாவின் உள்ளாக அந்தரியாமியாக இருக்கும் இறைவனையும் எக்காலத்தும் உணர்ந்து கொண்டால்தான் இவ்வுலகில் வாழ் வாங்கு வாழ்ந்து இறையுலகை அடைய வாய்ப்புண்டு. ஒருவன் தன்னை முழுமையாக உணர்ந்து கொண்டால் அவன் மனம் விரிவடைந்து நன்னெறிகளைக் கடைப்பிடிக்க முடியும். அங்ஙனம் நன்னெறிகளைக் கடைப்பிடித்து வாழ்ந்தால்தான் அவன் தன்னை உயர்த்தி இறைநிலைக்கு

உயருவான். இறைவன், ஒருவன் பொதுநலத்தில் அக்கறை கொள்ளும்பொழுதும் அனைத்து உயிர்களையும் சரிசமமாக எண்ணி அவற்றிடம் அன்பு பாராட்டும்பொழுதும் அவனது மனத்தில் குடிபுகுந்து அவனை ஆட்கொண்டு இறையானந்தத்தை அவனுக்கு கொடுக்கின்றான். அங்ஙனம் இறையானந்தத்தை மக்கள் அனைவரும் அருந்தினால் சமுதாயத்தில் அமைதியான சூழ்நிலைகளை விடுத்து வேறு எந்தவிதமான சிக்கலும் ஏற்படாது.

இறைவன் என்றும் தீயவர்களை அழித்து அல்லது திருத்தி நல்லவர்களைக் காக்கின்றான். இவர் திருமாவின் பத்து அவதாரங்களின் சிறப்பினைக் கூறுமிடத்து இக்கருத்தினை வழியுறுத்துகின்றார். எடுத்துக்காட்டாக, பக்தப் பிரகலாதனைக் காக்கும் பொருட்டு நரசிம்ம அவதாரம் எடுத்ததை,

"பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்ப,
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்க மாகிய தேவை"[22]

என்றும், இராவணாதிகளை ஒழிக்க இராமாவதாரம் எடுத்ததை,

"கலங்க மாக்கடல் கடைந்தடைத் திலங்கையர்
கோனது வரையாகம்
மலங்க வெஞ்சமத் தடுசரம் துரந்த"[23]

என்றும், கிருட்டிண அவதாரம் எடுத்ததை,

"வாம்ப ரியுக மன்னர்தம் உயிர்செக
ஐவர்கட் கரசளித்த"[24]

என்றும் தம் பனுவல்களில் அழகுற எடுத்துக் கூறுகின்றார். இறைவனின் அவதார நோக்கத்தை இன்றையச் சமுதாயப் பார்வையில் ஆராயுமிடத்து இன்றவன் அல்லவற்றை அழித்து நல்லவற்றைக் காப்பது போன்று மக்களும் சமுதாயத்தில் புரையோடியிருக்கின்ற முறைகேடுகளான சாதிக்கொடுமை, ஏழமை, பொறாமை, புறங்கூறுதல், கொலைக்குற்றம், பொருளாதார ஏற்றத் தாழ்வு, கடமை உணர்வுடன் அறவாழ்க்கை வாழாமை ஆகியக் குறைகளைக்

களைந்து மக்கள் நிறைவு வாழ்க்கை வாழ வேண்டும் என்ற கருத்துத் தெளிவாக விளங்குகின்றது.

இறைவன் அவதாரம் எடுத்துச் சமுதாயத்தை நல்வழிப்படுத்துகின்றான் என்ற கோட்பாட்டை மேலும் விரிவாக ஆராயலாம். இறைவனே உலகமாகவும் உலக உயிர்களாகவும் இருக்கின்றான். இதனால் உலகம் அவனுடைய திருவிருப்பத்தின் வழியே இயங்குகின்றது என்று கூறுதல் பொருத்தமுடையது. அங்ஙனமாயின் உலகில் தீமைகள் தோன்றுவதற்கான காரணங்கள் என்ன?, அத்தீமைகளை இறைவன் அவதாரம் எடுத்துத்தான் தீர்க்க வேண்டுமா?, ஏன் அவற்றை அவன் தன் புனித விருப்பத்தால் அழிக்க முடியாது? என்பன போன்ற ஆய்வு பூர்வமான வினாக்கள் எழுகின்றன. திருமங்கையாழ்வாருடைய வாழ்க்கை, அவருடைய இலக்கியங்களின் அமைப்பு, அவை வெளிப்படுத்தும் கருத்துகள் ஆகியவற்றின் அடிப்படையில் மேற்குறிப்பிட்ட வினாக்களுக்கு ஓரளவு உகந்த பதிலை நாம் பெறலாம் இவ்வாழ்வார் சமுதாயத்தில் தீமைகள் மக்களின் அறியாமையால்தான் ஏற்படுகின்றன என்று கருதுகின்றார் என்று கொள்ளலாம். இவர் மக்கள் இறைவாழ்க்கையைக் கடைப்பிடிக்காமல் இருப்பதாலும், எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணாமல் இருப்பதாலும், பொருளாசையானது மனிதனின் மனத்தைக் கெடுத்து விடுவதாலும் தீமை பயக்கும் செயல்களில் மக்கள் ஈடுபடுகின்றனர் என்று கருதுகின்றார். உலகில் மக்கள் தங்களுக்குள் கொண்ட கருத்து வேறுபாட்டினாலும், ஒரு கருத்து மற்ற ஒரு கருத்தை மறுப்பதினாலும் மனிதனை மனிதன் ஆள விரும்புவதினாலும், இயற்கையாகவே காலப்போக்கில் வாழ்க்கையின் போற்றத்தகு உண்மைகள் சிறிது சிறிதாக மறைந்து விடுகின்றன. மேலும் இயற்கையின் சீற்றத்தாலும், பிரளயங்கள் காரணமாகவும், உலகம் ஒரு காலகட்டத்தில் அழிந்து விடுகின்றது. அக்காலங்களில் உலகம் மீண்டும் தோன்றுவதற்கும், மக்களது அடிமை வாழ்க்கை மாறிச் சமரச வாழ்க்கை உருவாவதற்கும், மக்கள் இப்படித்தான் வாழ வேண்டும் என்று வழிகாட்டுவதற்கும் இறைவனே உலகில் அவதாரங்கள் எடுக்கின்றான் உலகில் ஒரு மாற்றத்தை மனித சக்தியால் செய்து முடிக்க முடியாத காலச் சூழல் ஏற்பட்டுவிடுகின்றது. ஆனால் அச்சமயத்தில் அம்மாற்றம் சமுதாயத்திற்கு மிகவும் தேவையாய் இருக்கும். அப்பொழுது இறைவனே நேரடியாக அவதாரம் கொண்டு அம்மாற்றங்களுக்குக் காரணமாகின்றான். இறைவன் அவதாரம் எடுக்காமலே தன் விருப்பத்தால் மக்களின் மனதை மாற்றமடையச் செய்து அதன் வழியாயும் சமுதாய மாற்றத்திற்கு வழிவகுக்கலாம் ஆனால் சமுதாயத்தில் உடனடித்தேவையின் அடிப்படையில் இறைவனே தன் புனித விருப்பத்தின் அடிப்படையில் நேரடியாக அவதாரங்கள் எடுத்து அம்மாற்றங்களுக்குக் காரணமாகின்றான்.

இறையுணர்வு சமுதாயத்தின் அனைத்து நிலைகளிலும் வாழ்கின்ற மக்களிடத்து உள்ளதொன்றே. இவ்வுணர்வை மக்கள் தம் அறிவால் உணர்ந்து

அதனை வெளிக்கொணர்ந்து தங்கள் வாழ்க்கையில் நடைமுறைப் படுத்தினால் தனி மனித மற்றும் சமுதாயச் சிக்கல்கள் அனைத்தும் தீர்ந்து விடும். ஈண்டு இறை உணர்வானது அன்பு வழிப்பட்டது. இறைவனின் படைப்பான இந்தச் சமுதாயத்தினிடம் அன்பு செலுத்தினால் அதுவே நம் இறையுணர்வைத் தூண்டி மக்களை நல்வழிப்படுத்தும். அதுவே பின்னர் பிறவாப் பேரின்பம் பெற ஏதுவாகும். இக்கருத்தினையே நம் ஆன்றோர்கள் தங்கள் இலக்கியங்களின் வாயிலாக விளக்கியுள்ளார்கள். இவர்களில் திருமங்கையாழ்வார் சுட்டும் இறைவனைச் சமுதாயப் பார்வையில் உணர்ந்து அதன்படி தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டால் குறையுடைய இச்சமுதாயத்தில் எங்ஙனம் நல்ல மாற்றங்கள் ஏற்படும் என்பதை எதிர்வரும் அதிகாரங்களில் விளக்கி அறியலாம்.

# இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு

ஒருவனுக்கு வாழ்க்கையில் சிக்கல் ஏற்படுகிறது என்றால் அது அவனைச் சார்ந்தவர்களையும் பாதிப்பதாக இருக்கின்றது. அதேபோல் சமுதாயத்திற்குச் சிக்கல் ஏற்படுகின்றது என்றால் அது தனி மனிதனையும் பாதிப்பதாக இருக்கின்றது. இவ்வழியில் தனி மனித வாழ்க்கையும் மற்றவர்களுடைய வாழ்க்கையும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்திருக்கின்றது. ஆகவே தனி மனிதச் சிக்கல்கள் நேர்மையான வழிகளில் தீர்க்கப்பட்டால், சமுதாயச் சிக்கல்கள் ஏற்படுவதற்கு இடமிருக்காது.

ஒருவன் வாழ்க்கையில் உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் ஆகிய இம்மூன்றையும் பெறுவதற்குப் போதுமான வாய்ப்புகளையும், வசதிகளையும் பெற்றிருந்தால் அவன் மகிழ்ச்சியடைவான். ஒருவன் தான் ஏற்றுக் கொண்டுள்ள கொள்கைகளுக்குக் களங்கம் விளைவிக்காத, அவை நடை முறையில் வெற்றி பெறுவதற்கான சூழ்நிலைகளைச் செய்து தருவதால் தனி மனிதன் சந்தோசமடைவான். மனிதனுக்குத் தன் வாழ்க்கையில் அமைதியின்மை ஏற்படும் பொழுதும், தோல்வி ஏற்படும் பொழுதும், கோபம் வெறுப்பு ஆகிய உணர்ச்சிகளைக் கொள்ளும் பொழுதும் அவன் மனம் அமைதியடைய நேர்மையான வழிகளில் அமைந்த பொழுது போக்கு வசதிகளை அவன் பெறுதல் நலம். மனிதன் தான் ஏற்றுக்கொண்ட கொள்கைகளில் வெற்றியடைய, அவன் வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களைப் போக்கிக் கொள்ளப் போதுமான பொருளாதார வசதியைப் பெற்றிருந்தால் அவனுக்கு வாழ்க்கையில் மேலும் மேலும் சிக்கல்கள் ஏற்படுவதற்கு இடமிருக்காது. மேலும் அவன் தான் விரும்பும் சமயத்தைத் தழுவுவதற்கும், அதன்வழி வாழ்க்கையை அமைத்துக்கொள்வதற்கும் அவனுக்கு முழுச் சுதந்திரம் கிடைப்பின் அதனாலேயே அவனுக்கு வாழ்க்கையில் நம்பிக்கை பிறந்து தன் வாழ்க்கையில் எதிர் நீச்சல் போட்டு உயர் நிலையை அடைவான்.

இன்றைய நிலையில் இந்து சமயம் வகுத்துக் கொடுத்த வருண தருமம் ஏற்புடையதாய் அமையாமல் போய்விட்டது. வருண தருமம் என்பது உண்மையில் மனிதன் இயற்கையாகத் தான் கொண்ட குணத்தின் அடைப்படையில் தன்

தொழிலை அமைத்து அதன்வழித் தன்னையும், இறைவனையும் அறிந்து கொள்ளும் வாழ்க்கை நெறியாகும். ஆனால் இன்றைய நிலையில் வருண தருமம் பிறப்பின் அடிப்படையில் பலதரப்பட்ட சாதிகளை ஏற்படுத்தி, அரசியல், பொருளாதாரம், சமூகம், சமயம், கல்வி ஆகிய துறைகளின் உண்மை நோக்கங்களைப் பாழ்படுத்திவிட்டது என்று கூறலாம். இந்தியாவில் மேலை நாட்டினரின் குடியேற்றத்தாலும், விஞ்ஞானம், மற்றும் பொருளாதார முன்னேற்றங்களாலும் வாழ்க்கையின் தேவைகள் பெருகிவிட்டன. இதன் காரணமாய், சமுதாயத்தில் ஒருங்கிணைந்த வாழ்க்கைமுறை தடைபட்டு உண்மையான வருண தருமம் மக்களால் கடைபிடிக்கக் கூடியதாய் அமையவில்லை. இதனால் சமுதாயத்தின் பழைய வாழ்க்கை அமைவிற்கும் புதிய வாழ்க்கை நோக்கங்களுக்கும் இடையில் எதனை விடுவது? எதனை ஏற்பது? என்ற முடிவு செய்ய முடியாத நிலைக்கு மனிதன் தள்ளப்பட்டிருக்கின்றான்.

இந்து சமயம் வாழ்க்கையை ஆசிரம நெறிப்படி பிரமச்சரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சன்னியாசம் என்று நான்கு நிலைகளாகப் பிரிக்கின்றது இதன்வழி மனிதன் இளமையில் கற்பன கற்று இல்லறத்தில் ஈடுபட்டு அனுபவிக்க வேண்டியதை அனுபவித்து பின் சிறிது சிறிதாக உலகப்பிடிப்பை விட்டு, முடிவில் வீட்டு நிலையை அடைய வேண்டும். இவ்வாசிரம நெறியின் உள்ளீடாக உண்மைகள் எக்காலத்திலும் ஏற்புடையதாகவே இருக்கின்றன ஆனால் இன்றைய சூழ்நிலையில் மனிதன் மேற்கூறிய ஆசிரம நெறிப்படி வாழாமல், 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்ற முறையில் ஒரு வரையறைக்குள் அமையாத வாழ்க்கை வாழுகின்றான். மனிதன் பிரம்மச்சரிய நிலையில் தன் அறிவை வளப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆனால் அவன் ஏழமையின் காரணமாயும், சிற்றின்ப ஈடுபாட்டினாலும், பெற்றோர்கள் அவனைச் சரியான முறையில் கவனிக்கத் தவறியதன் காரணமாகவும், மனதைக் கட்டுப்படுத்தத் தவறியதாலும், போதைப் பொருட்கள் மற்றும் முறைகெட்ட கேளிக்கையினாலும், தோல்வியைக் கண்டு துவண்டுவிடுவதாலும் தன் இளமைப் பருவத்தைப் பயனுடையதாய் அமைத்துக் கொள்ளாமல் வீணடித்து விடுகின்றான். மனிதன் கிருகத்த நிலையில் இறைவனை முன்னிருத்தி இல்லறவாழ்க்கையை அமைத்துக் கொள்வதை விடுத்து பொருளாதாரத்தில் மேன்மையடையவும் தனக்கும், தன் குடும்பத்தினருக்கும் வேண்டிய வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொள்வதற்கும் செலவழிக்கின்றான். மனிதன் இல்லறத்தில் சிற்றின்பத்தின் வழியாகப் பேரின்பத்தை அனுபவிக்கவும் அறத்தின்வழிப் பொருளீட்டவும் மறந்து விட்டான். இந்து சமயக் கொள்கையின்படி, மனிதன் இல்லறத்தின் வழியாக உலகியல் வாழ்க்கையை அனுபவிக்கும் பொழுதே அவன் பொருள்களின்பால் கொண்டுள்ள விருப்பத்தினைச் சிறிது சிறிதாக விட்டுவிடல் வேண்டும். இதுவே வானப்பிரத்தத்தின் அடிப்படைக் கொள்கை. ஆனால் இன்றைய நிலையில் மனிதன் தன் ஆசையினை வளர்த்துக் கொண்டே போகிறானே அல்லாது

அதனை விடுதல் வேண்டும் என்பதை மறந்து விட்டான். மனிதன் உலகியல் வாழ்க்கையில் முறையாகப் பெறவேண்டியதைப் பெற்ற பின்னர் அவன் உலகப் பொருள்களின்பால் கொண்டுள்ள பற்றினை விடுத்து சன்னியாச வாழ்க்கை வாழ்ந்து இறைவனைப் பற்றியே சிந்தித்து முடிவில் முக்திநிலையை அடைய வேண்டும். ஆனால் இன்று மனிதன் சன்னியாசம் என்பதையே மறந்து மாறுபட்ட வாழ்க்கை வாழுகின்றான். சுருங்கக் கூறின், மனிதன் இன்றைய சமுதாயத்தில் ஆன்மீக அறிவைப் பெறுவதற்காகத் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாமல் பொருள் இன்பத்திற்கும், வாழ்க்கை வசதிகளைப் பெருக்குவதற்கும் பயன்படுத்துகின்றான்.

இந்து சமயம் மனிதன் உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து இறைநிலை அடைய வேண்டும் என்று கர்ம வழி, ஞான வழி, பக்தி வழி என்று பல வழிகளை முன்மொழிகின்றது ஆனால் மனிதன் இறைவன் இருக்கின்றான் என்ற எண்ணம் இல்லாமல் இருக்கின்றான். அவன் அறவழியில் வாழ்ந்தால் தான் பெற வேண்டியதைப் பெற முடியாமல் போய்விடும் என்று எண்ணுகின்றான். அவன் மற்றவன் துன்பத்தின் அடிப்படையில்தான் தனது இன்பத்தை அடைய முடியும் என்று எண்ணுகின்றான் அவன் தான் பொருளாதார நிலையில் முன்னேறினால் மற்ற அனைத்து இன்பங்களும் தன்னைச் சேரும் என்று நம்புகின்றான். ஆகவே அவன் தன் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் தனது வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்கின்றான். இம்முறை அமைதியான வாழ்க்கைக்கு விரும்பத் தக்கது என்று கூறுதல் பொருந்தாது.

இந்திய அறநூல்கள் அனைத்தும் ஒவ்வொருவனும் தங்கள் வாழ்க்கையில் அடைய வேண்டிய முடிவுகளை அறம், பொருள், இன்பம், வீடு என்று குறிக்கின்றன. அறம் என்பது மனிதன் வாழ்க்கையில் இப்படித்தான் வாழ வேண்டும் என்று வரைமுறை அமைத்துக் கொள்வது பொருள் என்பது மனிதன் வாழ்க்கையைச் சிறப்புற நடத்தத் தேவையான பொருள்களைப் பெறுவது, இன்பம் என்பது மனிதன் அறத்தின் வழியாகவும் பொருளின் வழியாகவும் அடையும் இன்பத்தைக் குறிப்பது. வீடு என்பது மேற்கூறிய மூன்றையும் முறையாகப் பெற்று முடிவில் அடைய வேண்டிய இறுதி நிலையைக் குறிப்பது. ஆனால் மனிதன் இன்று இந்த நான்கு முடிவுகளையும் முறையாக அடைய முற்படாமல் பொருளையும் அதன்வழி கிடைக்கும் இன்பத்தையுமே தன் குறிக்கோள்களாகக் கொள்ளுகின்றான். மேலும் மனிதன் நீதியையும் நேர்மையையும் கடைப்பிடிக்காமல் குறுக்கு வழிகளிலும் நீதியற்ற வழிகளிலுமே தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்கின்றான்.

மனித வாழ்க்கை ஆன்மீகத்தின்வழி முன்னேற்றப் பாதையில் நடை போட வேண்டும் என்றால் இறைவனை முன்னிருத்தி அதன் பின்னணியில் அரசியல், பொருளாதாரம், சமூகம், சமயம் ஆகியவை தொடர்பான சட்ட திட்டங்கள் அமைந்திருத்தல் நலம். இவ்வகையில் அமைந்த சட்டங்கள்

மக்களது வாழ்க்கையின் கட்டுக்கோப்பிற்கும், ஆன்மீகக் கல்வி மக்களைச் சென்று சேருவதற்கும் வழிவகுக்கும். ஆனால் நடைமுறையில் மனித வாழ்க்கை மேற்கூறிய நெறிமுறைகளிலிருந்து மாறுபட்டு ஒருவன் உணவு, உடை, இடம் ஆகியவற்றினைப் போராடியே பெற வேண்டிய இக்கட்டான சூழ்நிலையே ஏற்பட்டுள்ளது.[1]

மனிதன் தான் கொண்ட கொள்கையில் பிடிப்பையும், வாழ்க்கையில் தேவைக்கு அதிகமான எதிர்பார்ப்புகளையும், தான் கருத்தில் கொண்ட செயல்களில் வெற்றியை அடைந்தே தீர வேண்டும் என்ற எண்ணத்தையும் கொண்டுள்ளான் இவற்றைப் பெறுவதற்குச் சமுதாயம் போதுமான வாய்ப்புகளைத் தனிமனிதனுக்குக் கொடுக்கத் தவறுதல் கூடாது. ஆனால் அவற்றை அவன் பெறத் தவறினால் அவன் சமுதாயத்தின்மீது வெறுப்புக் கொண்டு அதிலிருந்து ஒதுங்கி தனக்கென்று தனிப்பட்ட பழக்க வழக்கங்களை மேற்கொள்ள முயலலாம். அவன் சமுதாயம் விதிக்கும் வெளிக் கட்டுப்பாடுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் தான் தோன்றித் தனமாய் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள இடமுண்டு. இவர்கள் குற்றவாளிகளாகக் கூட மாறி சமுதாயத்திலிருந்து ஒதுங்கியிருந்து மற்றவர்களுக்குத் துன்பம் விளைவிப்பவர்களாக மாறிவிடுகின்ற வாய்ப்புகள் உருவாகும். சமுதாயத்தின் மீது வெறுப்புக் கொண்டவர்கள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டமாக அவர்களுக்கென்று ஒரு தனி நாகரிகம், கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றை உருவாக்கிக் கொள்ள முயலுவார்கள். இந்நிலை நீடித்தால் முடிவில் சமுதாயத்தில் பிரிவினை உருவாகி அமைதி குலைந்து குழப்பங்கள் ஏற்பட இடமுண்டு. இக்குறையைச் சமுதாயத்திலிருந்து போக்குவதற்கு உடனடியாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

சமுதாயத்தில் ஒவ்வொருவரும் தங்கள் எண்ணத்திற்குத் தகுந்தாற்போல வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். சமுதாயம் சராசரி மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பது பற்றி அவனுக்கு அறிவுரை வழங்கி அவனுடைய வாழ்க்கையை முறைப்படுத்த வேண்டும். அங்ஙனம் கற்றுக் கொடுப்பதன் வழியாகவும், அவர்கள் குற்றவாளியாய் இருப்பின் நேர்மையான வழியில் தண்டிப்பதன் வழியாகவும், அவர்களால் மக்களுக்குத் தீங்கு ஏற்படுவதைத் தடுத்துச் சமுதாயத்தைச் சீருடையதாக அமைத்திட முடியும்.

மனிதன் தூய்மையான வாழ்க்கை வாழ்பவனாகவும், தன்னலம் கருதாது பொதுநலம் பேணுபவனாகவும் இருப்பின், அவனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் சிக்கல்கள் எந்த நிலையிலும் ஏற்படா மனிதன் தூய்மையான வாழ்க்கை வாழ்வதற்கும், பொதுநலம் பேணுவதற்கும், அவனுடைய உள்ளார்ந்த மன உந்துதலும், அவனுடைய விருப்பமும் நேர்மையான வழிகளில் செயல்படுதல் மிகவும் அவசியம். அதனை விடுத்து, அவை குறுக்கு வழியில்

செயல்படின் அதன் விளைவாக அவனுக்கும் அவனைச் சார்ந்தவர்களுக்கும் பல்வழிகளிலும் சிக்கல்கள் ஏற்பட இடமுண்டு.[2]

மனிதன் தன் தேவைகளைத் தானே பூர்த்தி செய்து எடுத்த செயலில் வெற்றிபெற முயலுதல் அவசியம். அதற்கு அவன் வாழ்க்கைப் பாதையில் முன்னேறுவதற்கு முயற்சி எடுப்பவனாகவும், திடநம்பிக்கையையும் ஆன்மிகப் பலத்தையும் பெற்றிருப்பவனாகவும் இருத்தல் நலம். மனிதன் தன் முயற்சியில் முழு நம்பிக்கை கொண்டு சோம்பல், பய உணர்வு போன்ற குற்றங்களைத் தவிர்க்க முனைதல் வரவேற்கத்தகுந்தது. ஆனால் சமுதாயத்தில் நிலவிடும் சீர்கேடுகளால் ஒருவன் திறமையுடனும் நேர்மையுடனும் செயல்பட்டாலும் அவன் வாழ்க்கையில் தோல்வியையே அடைகின்றான்.[3] அதே சமயம் சமுதாயத்தில் ஒரு சிலர் குறுக்கு வழிகளில் சென்று எடுத்துக் கொண்ட செயலில் எளிதில் வெற்றியடைகின்றனர். இக்குறையை மக்கள் உடனடியாகத் தீர்த்து வைக்க முயலுதல் வேண்டும். அங்ஙனம் இல்லையெனில் சமுதாயத்தில் குறைகள் மேலும் மேலும் மலிந்து அவற்றைச் சீர்ப்படுத்த முடியுமா? என்ற கேள்விக்கு பதில்காண முடியாத நிலைக்கு மக்கள் தள்ளப்பட்டுவிடலாம்

மனிதன் எண்ண, எழுத, பேச, வாழ முழுச் சுதந்திரம் பெற்றவனாக இருத்தல் ஏற்புடையது. தனி மனிதனுடைய சுதந்திர உணர்வு நேர்மையான வழியில் பிறருக்கு இடையூறு பயக்காத நிலையில் அவனுடைய உள்ளார்ந்த மனதின் எண்ண ஓட்டத்திலிருந்து தோன்றி வெளியுலகில் எவ்விதத் தடையுமின்றிச் செயலாக்கம் பெறுதல் வேண்டும். இப்படிப்பட்ட சுதந்திரத்தால் மனிதன் தான் மேற்கொண்டுள்ள தொழிலினைத் தடையின்றிச் செய்திட முடியும் என்று கூறலாம். ஒருவன் தான் விரும்பும் சமயத்தைத் தழுவிட எவ்விதத் தடைகளையும் சமுதாயம் ஏற்படுத்தாது இருக்க வேண்டும். ஆனால் இன்றைய நிலையில் அரசியல், பொருளாதாரம், சமயம் ஆகிய துறைகளில் ஏற்பட்டுள்ள சிக்கல்கள் காரணமாக மனிதன் மேற்கூறிய சுதந்திரத்தை முழுமையாகப் பெற முடியாமல் அவன் எவ்விதத்திலாவது சமுதாய அமைப்பினைச் சார்ந்தே இருக்க வேண்டிய சோதனைச் சமுதாயத்தில் வேரூன்றி விட்டடது.[4]

சமுதாயத்தில் எல்லோருக்கும் நியாயமான அடிப்படை வசதிகளும் வாய்ப்புகளும் கிடைக்க வேண்டும். இந்நிலையில் அனைவருக்கும் அனைத்து நலன்களும் கிடைக்கும் எனலாம். அங்கு உயர்ந்தவன் - தாழ்ந்தவன், ஆண்டான்- அடிமை என்ற வேறுபாடுகள் இருக்க இடமில்லை. ஆனால் மனிதர்களில் யாராவது ஒருவனுக்குத் தேவையான அடிப்படை வசதிகளும் வாய்ப்புகளும் கிடைக்காமல் போனால், அதன் விளைவாய் அங்குப் பிரிவினைகள் ஏற்பட்டு ஏற்றத்தாழ்வுகள் துளிர்விட ஆரம்பித்துவிடும். ஒருவன் மற்றவர்களுடன் தோழமையுடன் பழகி அவர்களுடைய துன்பத்திலும் இன்பத்திலும் பங்கு கொள்வது சமுதாயத்திற்கு நன்மை பயப்பதாய் அமையும். ஒருவனுக்குச் சுய நலமும் பொறாமை குணமும் ஏற்படின் அதனால் முதலில்

அவனும் பின் அவனைச் சார்ந்தவர்களும் துன்பத்திற்கு ஆட்பட்டு விட இடமுண்டு. ஆகவே சமதர்ம வாழ்க்கையையும், தோழமை மனப்பான்மையையும் ஒருவன் தன் இரு கண்களெனப் பாவித்து வாழுதல் அவனுக்கு அனைத்து விதத்திலும் நன்மை பயக்கும்[5] இப்பண்புகளை ஒருவன் பெற்றிருப்பானானால் அவன் வாழ்க்கையில் துன்பங்கள் என்பதே ஏற்படாது. அப்படியே ஏற்பட்டாலும் மற்றவர்களுடைய உதவி அவனுக்குத் தகுந்த நேரத்தில் எளிதில் கிட்டும் அதனால் அவன் துன்பத்தையும் இன்பமாய் மாற்றிச் சமுதாயத்தில் சிறப்புற வாழ்வான்

மனிதன் நல்வாழ்க்கை வாழுதல் போற்றத் தகுந்தது நலவாழ்க்கை என்பது மனிதன் தன்னையும் தன் குடும்பத்தையும் காப்பாற்றிக் கொள்வதற்காக நேர்மையான முறையில் பாடுபட்டுப் பொருள் ஈட்டுதலைக் குறிக்கும். இந் நிலையில் மனிதன் மற்றவர்களைத் துன்புறுத்தியும் ஏமாற்றியும் வாழுதலைத் தவிர்த்தல் அவசியம். மனிதன் நன்னெறிகளில் மனதை ஈடுபடுத்துதல் நலம். மனிதன் சமுதாயச் சட்டதிட்டங்களுக்கேற்றாற்போல் வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருப்பினும் அவனுடைய விருப்பம், பேச்சு, நடத்தை, வாழ்க்கைமுறை ஆகியன தீயவழிகளில் செல்லாமல் நன்னெறியில் செலுத்துதல் அவனுக்கு நன்மை பயக்கும். இதற்கு அவன் புலன்களைக் கட்டுப்படுத்தி அவற்றை நேர் வழியில் செலுத்துதல், தீமை பயக்கும் எண்ணங்களை எண்ணாதிருத்தல் ஆகிய பழக்கங்களைக் கடைப்பிடிப்பது அவன் வாழ்க்கையைச் சிறப்படையச் செய்யும்

மனிதன் தன் மனதை எக்காலத்தும் நன்முறையில் வைத்திருக்கப் பழகிக் கொள்ளுதல் முக்கியம் ஒருவன் தீய எண்ணங்களை அவற்றின் உண்மைத் தன்மையை அறியாததன் காரணமாகவே எண்ணுகின்றான். ஆனால் அவன் மனதில் எழுந்த அத்தீய எண்ணங்கள் செயல் வண்ணமாகும்பொழுதுதான் அதன் தீமையை உணருகின்றான் ஆகவே மனிதன் தன் வாழ்க்கையை நன்னெறியில் அமைத்திடத் தன் மனதில் ஏற்படும் எண்ணத்தின் தன்மையை அப்பொழுதைக்கப்பொழுது சோதித்துப் பார்த்துக் கொள்ளுதல் அவசியமாகும். அதனால் அவன் உலகில் துன்பத்தை அனுபவிப்பதன் காரணம், அத்துன்பத்தின் தன்மை, குரோதம் மற்றும் ஒரு பொருளின்மீது சந்தேகம் கொள்வதால் ஏற்படும் துன்பங்கள் ஆகியவற்றை உணர்ந்து தீய எண்ணங்களைக் கடைப்பிடிக்காமல் அமைதியான வாழ்க்கை வாழ முயலுவான்.

மனிதனுடைய எண்ணம் சிறந்து விளங்க அதை நான்கு வழிகளில் முறைப் படுத்தலாம் மனிதன் முதலில் தன் மனதைப் புனிதமானதாயும், பொருளின்பால் செல்லாததாயும் கட்டுப்படுத்தலாம். இரண்டாவதாக மனிதன் தன் மனதில் ஏற்படும் சந்தேகங்களை ஒழித்து வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளை அறிந்து கொள்ளலாம். மூன்றாவதாக மனிதன் இன்பத்தால் ஏற்றமும் துன்பத்தால் தோய்வும் கொள்ளாத வகையில் மனதைப்

பண்படுத்தலாம். நான்காவதாக மனம் அமைதியுற்று, இன்பமும் துன்பமும் அவனை எக்காலத்தும் மாற்றமடையச் செய்யாமல் பார்த்துக் கொள்ளலாம். இந்நிலையில் மனம் அமைதியடைந்து உலகியல் வேறுபாடுகளால் மாற்றம் கொள்ளாமலும் தீய எண்ணங்கள் தோன்றாமலும் இருக்கும் இந்நிலையை எவன் அறிந்து அந்நிலைக்கு உயருகின்றானோ அவன் இவ்வுலகில் வாழத் தகுதி உடையவனாகக் கருதப்படுவான் அவனால் இவ்வுலகின் நன்மை தீமைகளை அறிந்து அதற்குத் தகுந்தாற்போல் தன் மனதை அமைத்துக் கொண்டு வாழ்க்கையை முன்னேற்றப்பாதைக்கு நடத்திச் செல்ல இயலும்.

மனிதன் தன்னை முழுமையாக உணர்ந்து தன் தவறுகளை ஒழித்து உண்மையையும் இறை நம்பிக்கையையும் தன் இரு கண்களென உணர்வானாயின் அவன் நிச்சயம் தன் வாழ்க்கையில் முன்னேறுவான் ஒருவன் தன்னைத் தனியாகப் பிரித்துப் பார்க்காமல் தன்னை மனிதர்களில் ஒருவனாக எண்ணித் தன் வாழ்க்கையை மற்றவர்களுடைய வாழ்க்கையுடன் இணைத்து, தன்னை மக்களிலும் மக்களைத் தன்னிலும் பார்க்கும் மன வளர்ச்சியை அவன் கொண்டிருத்தல் ஏற்புடையது. மனிதன் தன்னிடம் மிக்கிருக்கின்ற குணத்தின் அடிப்படையில் தன் தொழிலை அமைத்துக் கொண்டு, கடமை உணர்வுடனும், இறை நம்பிக்கையுடனும் இருத்தல் நலமுடையது. மேலும் ஒருவன் தான் செய்யும் செயலால் தன்னையும், தன் செயலின் உள்ளீடாக இறைவனது இருப்பையும், உணர்ந்து அதன்படி தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயலுதல் அவனுக்கு நன்மை பயக்கும்.

திருமங்கையாழ்வாருடைய இலக்கியத்தில் தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய நன்னெறிகள் பற்றிய கருத்துகள் நேரடியாக இல்லை. ஆனால் அவர் தம்மைப் பற்றிக் கூறும்பொழுதும், தாம் இறைவனின் திருவருள் பெற்றபின் அவனைப் போற்றிப் பாடும்பொழுதும், தாம் சென்று வணங்கிய புண்ணிய நகரங்களைச் சிறப்பிக்கும்பொழுதும், ஆங்குறையும் இறைவனின் பூசைத்திருமேனிகளைத் துதி செய்யும் பொழுதும் மேற்கூறும் கருத்துக்கள் உள்ளீடுகளாக வெளிப்படுகின்றன.

மனிதன் தன் வாழ்க்கை முழுமையானதாக அமைத்துக் கொள்ளவும் நன்முறையில் வாழவும் இருபெரும் கொள்கைகளை முறையாகக் கடைபிடித்தல் அவசியம் ஆகும். அவையே உண்மை பேசுதல், பிற உயிர்களைத் துன்புறுத்தாமல் இருத்தல் இவ்விரண்டும் ஒன்றுடன் ஒன்று பிரிக்கவொண்ணாத தன்மையைக் கொண்டிருக்கின்றன. இதனை ஒருவன் தன் வாழ்க்கையில் கடைபிடிப்பனாயின் அவன் எதனையும் எதிர்கொள்ளும் வைராக்கியம் கொண்டவனாகவும், கடமை, கண்ணியம், கட்டுப்பாடுடையவனாகவும் இருப்பான் இக்குணமுடையோன் ‘எல்லோரும் ஓரினம், எல்லோரும் ஓர் குலம்’ என்ற எண்ணத்தின் அடிப்படையில், சாதிக் கொடுமையைச் சமுதாயத்திலிருந்து ஒழிக்கப் பாடுபடுவான்.

திருமங்கையாழ்வார் தாம் இறையருள் பெறுவதற்கு முன்னர் இந்நெறிகளைக் கடைபிடிப்பவராக இருக்கவில்லை. ஆனால் இறைவனே இவ்வாழ்வாரது நல்வினைத் தொடர்பால் இவரைத் தடுத்தாட்கொண்ட பிறகு இவர் தன் பழைய வாழ்க்கையை எண்ணி,

"கள்வனேன் ஆனேன் படிறுசெய் திருப்பேன்
கண்டவா திரிதந்தே னேலும்
தெள்ளியேன் ஆனேன்; செல்கதிக் கமைந்தேன்;
சிக்கெனத் திருவருள் பெற்றேன்"

என்று கூறி வருந்துகின்றார் இவ்வரிகளை ஆராயும் பொழுது இவ்வாழ்வார் தம் வாழ்க்கையில் பிற உயிர்களைக் கொன்று, நெறிகெட்ட வாழ்க்கை வாழ்ந்தமை குறித்து நினைந்து, அதற்காக வருந்துகின்ற பாங்கு தெள்ளெனத் தெரிகின்றது. மேலும் இதன் வழியாக மனிதன் தன் வாழ்க்கையில் உண்மையையும், பிற உயிர்களைத் துன்புறுத்தாமையையும் கடைப்பிடிக்க வேண்டும் என்ற உண்மையைச் சமுதாயத்திற்கு இவ்வாழ்வார் மறைமுகமாக எடுத்தியம்புகின்றார் என்று நாம் கொள்ள இடமுண்டு.

வேதம் இறைவனைப் பற்றிய, உயிர்களைப் பற்றிய, மனித வாழ்க்கையைப் பற்றிய பேருண்மைகளை உலக மக்களுக்கு அறிவித்திடத் தோன்றியது. ஆகவே வேதத்தை உலக உண்மையை வெளிப்படுத்தும் ஒன்று என்றும், அதை ஒவ்வொருவரும் தெரிந்து கொண்டு அதன்படி வாழவேண்டும் என்றும் கொள்ளலாம். இவ்வாழ்வார் வேதத்தை இறைவனாக எண்ணி,

"சந்தோ கா! பௌழி யா! தைத் திரியா!
சாம வேதிய னே! நெடு மாலே"[7]

என்று திருமாலை அழைக்கின்றார். இவ்வழிகளைப் பார்க்கும் பொழுது, பேருண்மைகளை உள்ளடக்கி உலகத்தோர்கள் அனைவரும் உய்ய இறைவனே வேதவடிவினன் ஆனான் என்ற கருத்து வெளிப்படுகின்றது. மேலும் மனிதன் அவ்வுண்மையை உணர்ந்து, அதனை அவன் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்பெறுகிறது.

இவ்வாழ்வார் இறைவன் பூசைத்திருமேனியாய் உறையும் இறையருள் நகரங்கள் குறித்துக் கூறும்பொழுது, அங்கு வேதங்கள் ஒலித்துக் கொண்டிருத்தல், வேள்விகள் செய்து கொண்டிருத்தல், நீதிநூல்களின் அடிப்படையில் கலந்துரையாடுதல் ஆகிய செய்திகள் பேசப்படுகின்றன. இதனை இவ்வாழ்வார்,

"இலக்கியநான் மறையனைத்தும் அங்க மாறும்
ஏழிசையும் வேள்விகளும் எண்திக் கெங்கும்
சிலம்பியநற் பெருஞ்செல்வம் திகழும்"[8]

என்றும்,

"நால்வகை வேதம், ஐந்து
வேள்வியா றங்கம் வல்லார்
மேலைவா னவரின் மிக்க
வேதியர்"[9]

என்றும் கூறுகின்றார். வேள்விகள் செய்பவர்களும், அறநூல்களைப் பற்றிப் பேசுபவர்களும் இறைவனைத் துதிப்பவர்களாகவும் நன்னெறிகளைக் கடைப் பிடிப்பவர்களாகவும் இருப்பார்கள் என்பது வெளிப்படை. இவர்களைப் பற்றி இவ்வாழ்வார் தம் இலக்கியத்தில் குறித்துள்ளமையை நோக்கும்பொழுது ஒருவன் தன் வாழ்க்கையில் மேற்கூறிய நல்ல பழக்கங்களைக் கைக்கொள்ள வேண்டும் என்ற நீதியினை இவ்வாழ்வார் பிறருக்குக் கூறுகின்றார் என்று கொள்ளலாம். மனிதன் நன்னெறிகளைக் கடைபிடிக்கவில்லை என்றால் அவன் தீவினையால் பிறப்பு, இறப்பு என்னும் சக்கரத்தில் உழலுவான். ஆனால் இவ்வாழ்வார் இச்சக்கரத்தில் அகப்படாமல் இறைவனிடம் பக்தி கொண்டமையை,

"சாதலும் பிறத்தலும் என்றிவற்றைக்
காதல்செய் யாதுன கழலடைந்தேன்"[10]

என்ற வரிகளிலே கூறுகின்றார். இக்கருத்தை இன்றைய நிலையில் ஒருவனுடைய வாழ்க்கையுடன் இணைத்துப் பார்க்கும்பொழுது அவன் தன் வாழ்க்கையில் பிறருக்குத் தீமைகள் செய்திருந்தாலும், அதனை அவன் உணர்ந்து இறைவனிடம் சரணடைந்தால், அவனை இறைவன் நல்வழிப்படுத்தி வீட்டு நிலையை அளிப்பான் என்ற உண்மை நமக்குத் தெளிவாகின்றது.

இவ்வாழ்வாருடைய பெரிய திருமொழியிலே இராமனாதிகளிடம் போரிட்டுத் தோல்வியுற்ற இராவணாதிகளான அரக்கர்கள் தங்கள் தலைவன் இராவணனது தீயச் செயல்களை இழித்துரைத்து இராமனின் புகழை உயர்த்தி,

"இரக்க மின்றியெங் கோன்செய்த தீமை
இம்மை யேயெமக் கெய்திற்றுக் காணீர்"[11]

என்றும்,

"அத்த எம்பெரு மான்! எம்மைக் கொல்லேல்
அஞ்சினோம்"[12]

என்றும் பாடுகின்றனர். இப்பனுவல்களை நோக்கும்பொழுது இவை பிறப்பால் தீய குணங்களை உடையவர்களும், இறைவனை ஏற்று நல்வழியில் வாழ்க்கையை நடத்த முயல்கின்றனர் என்ற பாங்கிலே அமைந்துள்ளமை

அறியப்பெறுகின்றது. சமுதாயத்தில் தீயவர்களும் திருந்தி நல்லவர்களாக மாறும் பொழுது அங்குத் தீயவர்களே இல்லாமல் நல்லவர்களே இருப்பார்கள் எனலாம். அதனால் சமுதாயத்தில் நல்லவை நடைபெற்றுச் சமுதாயம் அனைத்து நிலைகளிலும் முன்னேறும் என்ற உண்மையை அவர்கள் உணர்ந்து அதன்வழி வாழுதல் முடியும்.

இவ்வாழ்வார் மனிதன் வாழ்க்கையில் சந்திக்கும் அனைத்துச் சோதனைகளையும் தாங்கிக் கொண்டு அதில் வெற்றி பெற முனைய வேண்டும் என்று கூறுகின்றார். ஒருவன் தன்னை இறைவனிடம் முழுமையாக ஒப்படைத்து பக்தி செய்தால் அவனுக்குத் தன்னம்பிக்கை தானாகவே பிறக்கும். அங்ஙனம் தன்னம்பிக்கை பிறந்தால் அவன் வாழ்க்கையில் ஏற்படும் சோதனைகளைத் தாங்கி எளிதில் அவற்றில் வெற்றிபெற முடியும். இக்கருத்தினை இவ்வாழ்வார்,

"துஞ்சும்போ தழைமின் துயர்வரில் நினைமின்;
துயரிலீர்! சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர், நம்முடைய வினைக்கு
நாராய ணாவென்னும் நாமம்"[13]

என்ற வரிகளின் உள்ளீடாக எடுத்துக் கூறுகின்றார்.

இவ்வாழ்வார் அரசனாக இருந்து மகிழ்ந்திருந்த காலத்தில் இறைவன் அவரைத் தடுத்தாட்கொண்டதால் அரச பதவியைத் துறந்து, இறையருள் வேண்டி இறைவனுறையும் திருநாட்டிற்கெல்லாம் சென்று ஆங்குறையும் இறைவனின் பூசைத் திருமேனியை வணங்கி இறையானந்தத்தை அருந்தி இன்புற்றார். இதனை நோக்கும்பொழுது தான் மட்டும் இறையருள் பெற்றால் போதாது உலகிலுள்ள அனைவரும் அதனைப் பெற வேண்டும் என்ற இவரது நல்லெண்ணம் வெளிப்படுகின்றது. மேலும் இவ்வாழ்வாரது திருமடல் பாடல்களில் அறம், பொருள் இன்பம், வீடு என்று முன்னோர்கள் குறித்த வாழ்க்கை நெறியைப் பற்றிச் சுட்டுகின்றார். அதில் வீடு என்னும் நிலையைச் சந்தேகத்திற்கு இடமின்றி அடைந்தவர் என்று யாரும் இல்லை என்று இவ்வாழ்வார் கூறுகின்றார். ஆகவே அதனை மக்கள் எண்ணாது இவ்வுலகில் இறைவனுடன் பக்தி வழியில் கூடி இறைவனுடன் இருந்து இன்புற வேண்டும் என்பதை இவ்வாழ்வார்,

"இன்னதோர் காலத் தினையார் இதுபெற்றார்
எண்ணவும் கேட்டறிவ தில்லை - உளதென்னில்
மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்
அன்னதோர் இல்லியி னூடுபோய் வீடென்னும்
தொன்னெறிக்கட் சென்றாரைச் சொல்லுமின்கள்"

என்று கூறுகின்றார். இவ்விளக்கத்தை ஆழ்ந்து நோக்கும்பொழுது

இறைவனுடன் பக்தியால் இணைய வேண்டும் என்ற ஆவலால் இவ்வாழ்வார் வீட்டு நிலையையே தியாகம் செய்யும் உணர்வை இவரது இலக்கியத்தைப் படிக்கும் அனைவரும் உணருவர். மேலும் இவ்வாழ்வாருடைய பனுவல்களைப் படிக்கும் பக்தர்கள் மேற்கூறிய இவ்வாழ்வாரது தியாக உணர்வை உணர்ந்து தாங்களும் அவரைப் போன்றே தியாக உள்ளத்தைப் பெற்று உலக மக்களை உய்விப்பதற்காகவே தங்களை அர்ப்பணித்துக் கொள்வர் என்று நாம் கொள்ளலாம்.

மனிதன் தான் செய்யும் செயலின் உள்ளீடாகவும் அதற்கு உகந்தாற் போல் எண்ணும் எண்ணத்தின் அடிப்படையிலும் அவன் வாழ்க்கையில் எதிர் கொள்ளும் வெற்றி தோல்வி என்னும் இருநிலைகளினாலும் இருவேறுபட்ட உண்மைகளை எண்ணிப் பார்க்கின்றான். அவையே, தான் செய்யும் செயலும் அதன் முடிவும் முன்னமே இறைவனால் முடிவுறுத்தப்பட்டுள்ளது என்னும் விதிக் கொள்கையும், தனி மனிதன் தன் வாழ்க்கையைத் தன் சொந்த முயற்சியினாலும் விருப்பத்தினாலும்தான் அமைத்துக்கொள்ள முடியும் என்னும் மதிக்கொள்கையுமாகும். மேலெழுந்த நிலையில் பார்க்கும் பொழுது விதிக் கொள்கையும், மதிக் கொள்கையும் ஒன்றுக்கொன்று முரண்பாடுடையன போல் தோன்றும் ஆனால் மனிதன் இவ்விரு கொள்கைகளையும் ஒன்றுபடுத்தி அவற்றின் தன்மையை உணர்ந்து அதன்வழி நடப்பின் அவனுடைய வாழ்க்கை சிறப்படையும் எனலாம் இந்நிலையில் ஒருவன் தான் செய்யும் செயலின் தன்மையையும் அதன் விளைவையும் முடிவு செய்கின்றான் என்பதையும், அதன்வழி அவன் உலகில் நடக்கும் அனைத்துச் செயல்களையும் முறைப்படுத்தி ஒழுங்கு செய்கின்றான் என்பதையும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். இவற்றை மனிதன் தெரிந்து கொண்டால் முடிவில், அவன் தன் உயிரை இறைவனிடம் ஒப்படைத்துவிடுவான். அப்பொழுது அவனுக்கு இறைவனே தன் உயிராக இருக்கின்றான் என்ற எண்ணமும், தான் இறைவனின் கையில் ஓர் கருவி என்ற எண்ணமும் வலுப்பெறும். இந்நிலையில் அவன் இறைவனே நம்மை இயக்க நாம் அனைத்துச் செயல்களையும் செய்கின்றோம் என்று எண்ண இடமுண்டு. ஆகவே இறைவனே உலகைக் கட்டுப்படுத்துகின்றான் என்ற நிலையில் விதிக் கொள்கையையும், இறைவன் தன் உயிரின் உள்ளீடாக இருந்து தான் செய்யும் அனைத்துச் செயல்களையும் வழிப்படுத்துகின்றான் என்ற நிலையில் மதிக்கொள்கையையும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்திருப்பதை உணர்ந்து கொள்கின்றான். இதனால் எல்லாம் இறைவனின் திருவிருப்பத்தால் இயங்குகின்றன என்ற பக்குவப்பட்ட மனதுடன் அவன் தன் வாழ்க்கையைச் சிக்கலின்றி அமைதியாக நடத்திச் செல்வான் திருமங்கையாழ்வார் இறைவன் தன்னைத் தடுத்தாட்கொள்வதற்கு முன்னர் தம் ஐம்புல இச்சையால் செய்த செயல்களைத் தம் மதியின் அடிப்படையில் செய்தார் என்று கூறலாம் ஆனால் அதே சமயம் இவருக்கு இறையருள் கிடைத்த பின்னர் தம் தீய செயல்களையெல்லாம் எண்ணி, வருத்தம் கொண்டமை விதிக் கொள்கையால் நடந்தது என்று கூறலாம். இந்நிலையில்

இவ்வாழ்வார் தன் விருப்பத்தை இறை விருப்பத்தில் உள்நிருத்தி அதன் விளைவால் இறையெண்ணம் அவர் மனதில் கொப்பளிக்க தம் இலக்கியம் அனைத்தையும் இயற்றி உலக மாந்தரை உய்ய வழி வகுத்தார். மேற்கூறிய உண்மையை அடிப்படையாகக் கொண்டு முதலில் புலன்களுக்குக் கட்டுப்பட்ட இவ்வாழ்வார் முடிவில் இறைவனிடம் தம்மையே ஒப்படைத்தமையை,

"கடியார் காளையர் ஐவர் புகுந்து
காவல் செய்தஅக் காவலைப் பிழைத்து
குடிபோந் துன்னடிக் கீழ்வந்து புகுந்தேன்"

என்று கூறியுள்ளமை இங்கு பொருத்தமுடையதாய் உள்ளது.

மேலும் இக்கருத்தை ஆராய்ந்தால் உலக நிகழ்ச்சிகள் இறைவன் விதித்த விதியின் வழியே நடக்கின்றன என்று கட்டுரைக்கலாம். அதற்காக இறைவன் உலகின் தீய செயல்களுக்குக் காரணமாகின்றான் என்று முடிவு செய்ய முடியாது. மனிதன், இறைவன் தன்னுள் இருக்கின்றான் என்று உணர்வானாயின் அவன் நல்லதையே செய்வான். இந்நிலையில் அவனுடைய செயல்களுக்கு இறைவனைக் காரணமாகக் கொள்ளலாம். இதனை விடுத்து மனிதன் இறைவன் அந்தரியாமியாக தன்னுள் இருக்கின்றான் என்பதை அறியாமல் மமதையால் தீய செயல்களைச் செய்கின்றான் எனில் அதற்கு இறைவன் பொறுப்பாகாமல் மனிதனே பொறுப்பேற்பவனாகின்றான். ஆகவே மனிதன் இறைவனை உணராத நிலையில் தீயவற்றைச் செய்து தீவினைகளுக்குக் காரணமாகின்றான். அதே சமயம் அவனே இறைவனை உணர்ந்து நற்செயல்களைச் செய்வதால் நல்வினைகளுக்கும் காரணமாகின்றான். ஆகவே மேற்கூறியதை நுணுகி ஆராயும்பொழுது, மனிதன் தன் வாழ்க்கையில் நடைபெறும் செயல்களைச் செய்வதில் சுதந்திரமானவன் என்ற உண்மையும், இறைவன் அவனுடைய சுதந்திரத்தில் என்றும் தலையிடுவதில்லை என்ற உண்மையும் விளங்குகின்றன.

மனிதன் உலகில் வாழ்வாங்கு வாழ வேண்டுமானால் வெற்றியால் இன்பத்தையும் தோல்வியால் துன்பத்தையும் கொள்ளாமல் மனதை எந்நேரமும் சமநிலையில் வைத்திருத்தல் வேண்டும். மனிதன்,

"யாது மூரே யாவருங் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே

பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை இகழ்த லதனினு மிலமே

என்னும் புறநானூற்றுப் பாடலின் உண்மையை அறிந்தவனாக இருப்பது நன்மை பயக்கத்தக்கது. இக்கருத்தினை இவ்வாழ்வார் நேரடியாகத் தன் பாடல்களில் கூறவில்லையாயினும் மறைமுகமாகப் பல்வேறு இடங்களில் சுட்டியுள்ளார் என்று கருதுவதற்கு இடமுண்டு. மனிதன் இறைவனிடம் கொள்ளும் பக்தியால் தன்னையும் தன் செயலையும் அதன் பயனையும் இறைவனிடம் ஒப்படைத்து, எல்லாம் இறைவன் செயல் என்று எண்ணும் மனநிலை ஏற்படின் அந்நிலையில் அவன் மனம் சமநிலையை அடைகின்றது என்று கூறலாம். இக்கருத்தினை இவ்வாழ்வார்,

"பரம! நின் அடியிணை பணிவன்
வருமிடர் அகல - மாற்றோ வினையே"[17]

ன்ற வரிகளில் உள்ளீடாக இக்கருத்தை வைக்கின்றார் என்று நாம் கொள்ளலாம். இவ்வரிகளில் இவ்வாழ்வார் இறைவனைத் தொழுகின்றவர்களுக்கு நல்வினைகள் தீவினைகள் என்று எவ்வினைகளும் சென்று சேரா என்று கூறுகின்றார். மனிதன் எவ்வினைக்கும் ஆட்படாமல் இருப்பானானால் அவனுக்கு வாழ்க்கையில் துன்பம் என்பதே இருப்பதற்கு இடமில்லை. அத்துடன் மேற்கூறிய விளக்கத்திலிருந்து அவன் மனம் எவ்வித ஞ்சலமும் கொள்ளாமல் சமநிலையில் இருக்கும் என்றும் நாம் அறிந்து காள்ளலாம். மனதில் சமநிலை உருவாவதால் மனிதன் நல்வினை பயக்கக் டிய செயல்களை மட்டும் செய்து, தீவினையை நிச்சயம் பெறமாட்டான். தனை இவ்வாழ்வார்,

"சொற்றான் ஈரைந் திவைபாடச்
சோர நில்லா துயர்தாமே"[18]

ன்ற வரிகளில் சுட்டுகின்றார். மனிதன் இவ்வாழ்வார் வழி இறைவனிடம் தி கொண்டால் அவன் மனம் சமநிலை அடைவதுடன் அது எப்பொழுதும் றைவனை நினைத்துக்கொண்டே இருக்கும். அதனால் அவன் மனம் குவப்பட்டுத் தன் வாழ்க்கையில் நல்லதையே செய்வான். இக்கருத்தினை வ்வாழ்வார்,

"பாட்டிவை பாடப் பத்திமை பெருகிச்
சித்தமும் திருவொடு மிகுமே"[19]

ற வரிகளில் தெளிவுபடுத்துகின்றார்.

இவ்வாழ்வார் இறைவனை முன் வைத்து அவன் பெருமையைப்பாடும் வன் தன் வாழ்க்கையைச் சிறப்பாக அமைத்துக் கொள்ள முடியும் பதை,

'நற்பொருள் காண்மின் பாடிநீ ருய்ம்மின்
நாராய ணாவென்னும் நாமம்'

என்ற வரிகளில் சுட்டுகின்றார். ஒருவன் தன்னையே இறைவனிடம் ஒப்படைத்துத் தன் மனதை நேர்வழியில் நெறிப்படுத்த முயலுதல் வேண்டும் என்பதை,

"வந்துன தடிமயன மனமபுகநதாய
புகுந்ததற்பின் வணங்கும் என்
சிந்தனைக் கினியாய்! திருவே! என் னாருயிரே"[21]

என்ற வரிகளிலே இவ்வாழ்வார் குறிப்பாகச் சொல்லுகின்றார். இவ்வாழ்வார் மக்கள் வாழ்வாங்கு வாழ அனைத்து வழிகளையும் காட்டுகின்றார் என்றாலும் பக்தன் முடிவில் தன்னையே இறைவனிடம் ஒப்படைத்து விட வேண்டும் என்கின்றார். மனிதன் என்னதான் முயற்சி உடையவனாய் இருப்பினும் அவனுடைய முயற்சியுடன் இறைவனுடைய அருளும் ஒன்று சேர்ந்தால்தான் அவனுடைய வாழ்க்கையைச் செம்மையான முறையில் அமைத்துக் கொள்ளமுடியும். இதுவே இவ்வாழ்வார் தனி மனிதனுக்குக் காட்டும் வாழ்க்கை நெறி என்று கட்டுரைக்கலாம்.

இலங்காபுரி அரக்கர்கள் தங்களது நேர்மையற்ற வாழ்க்கைக்கு வெட்கி அவர்கள் தங்கள் தீய பழக்கங்களை விட்டொழித்து இறைவனிடம் சரணடைந்து நேர்மையான வாழ்க்கை வாழ விருப்பம் கொள்கின்றனர் இதிலிருந்து மனிதன் தன் வாழ்க்கையில் என்னதான் சோதனைகள் ஏற்பட்டாலும் அவன் நேர்மையான வாழ்க்கையிலிருந்து தவறுதல் கூடாது என்ற கருத்து வெளிப்படுகின்றது என்று நாம் கொள்ளலாம்.

இதனை இவ்வாழ்வார்,

"கும்ப னோடு நிகும்பனும் பட்டான்;
கூற்றம் மானிட மாய்வந்து தோன்றி
அம்பி னால்எம்மைக் கொன்றிடு கின்றது;
அஞ்சினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ"[22]

என்று கூறும் வரிகளில் உள்ளடக்கியுள்ளார். மனிதன் நல்ல பழக்கங்களைக் கைக்கொள்ளின் இறையுலகை நிச்சம் அடைவான் என்பதை,

"சங்கமலி தமிழ்மாலை பத்திவைவல் லார்கள்
தரணியொடு விசும்பாளும் தன்மைபெறு வாரே"[23]

என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறுகின்றார். அரக்காகள் தங்கள் கொடுங் குணத்தை எண்ணி வெட்கம் கொள்ளுதலையும் அதற்காக இறைவன்முன் அஞ்சுகின்ற தன்மையையும் மனித வாழ்க்கையுடன் தொடர்பு படுத்திப் பார்த்தால் பல அரிய கருத்துகளை வெளிக் கொணரலாம். மனிதனுடைய மனநிலை அவனுடைய பெற்றோர்களாலும் வாழ்க்கைச் சூழ்நிலைகளாலும் நிர்ணயிக்கப்படுகின்றது என்பது வெளிப்பாடு. அதே சமயம் அவனடைய மனம் நன்மை தீமைகளை இனங்கண்டு கொண்டு விடும் நிலைக்குப் பக்குவப்பட்டு விட்டால் அவன் தன் எண்ணத்தை, வாழ்க்கையின் அமைப்பை நேர்மையான வழிகளில் மாற்றி அமைத்துக் கொள்ளுவான் என்று கருதலாம். இந்நிலையிலேயே அரக்கர்களும் நல்லவர்களாக மாறுவதற்கு முயற்சி செய்யும் போக்கு இவர் பனுவல்களில் காணப்பெறுகின்றது. மேலும் குற்றம் புரிந்தவர் யாராயிருப்பினும் இறைவன் முன் அஞ்சுகின்ற நிலையை இவ்வாழ்வார் சுட்டுவதினால் இவர் இறைவன் மக்களுடைய செயல்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான் என்ற கருத்தை மனிதனுக்கு உணர்த்துகின்றார். இதனைத் தனி மனிதன் ஏற்றால் அவன் தன் வாழ்க்கையை நிச்சயம் நன்முறையில் அமைத்துக் கொள்ள முடியும்

மேற்கூறிய அனைத்துக் கருத்துகளையும் ஒன்றுபடுத்திப் பார்க்கும் பொழுது, திருமங்கையாழ்வாருடைய பனுவல்கள் காலத்தால் பழமையானதாயும் அவை அமைப்பால் பக்திப் பாடல்கள் போன்றும் அமைந்திருப்பினும் அவற்றை ஆழ்ந்து நோக்கும்பொழுது மனிதன் சமுதாயத்தில் வாழும்பொழுது ஏற்படும் சிக்கல்களைப் போக்குவதற்குத் தேவையான அனைத்து வழிகளையும் காட்டுகின்றன என்று கூறலாம். ஆகவே மனிதன் இவ்வாழ்வாருடைய இலக்கியத்தைப் பயின்று அவர் முன்மொழிந்துள்ள அனைத்து நற்குணங்களையும் பெற்று அதன்வழி வாழ்வானாயின் அவன் மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாய் விளங்கி அவனும் அவனைச் சார்ந்தவர்களும் இன்பமாய் ஏற்றமிகு வாழ்க்கை வாழ்வார்கள் என்பது தேற்றம்.

# இறைவனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பு

சமதர்மச் சமுதாயம் என்பது ஒத்த கருத்துடைய மக்கள் ஒற்றுமையுடன் வாழ்ந்து தங்களுடைய அனைத்துத் தேவைகளையும் பூர்த்தி செய்து, அரசியல், பொருளாதாரம், சமயம் ஆகிய துறைகளில் தன்னிறைவு பெற்று இன்பமாய் வாழும் நிலையைக் குறிக்கும். மக்கள் சமுதாயத்தில் அமைதியாகவும் முன்னேற்றப் பாதையிலும் செல்லுகின்றார்கள் என்றால், அங்கு வாழும் அனைவருக்கும் உடல் தொடர்புடைய, உள்ளத் தொடர்புடைய, ஆன்மீகத் தொடர்புடைய அனைத்துத் தேவைகளும் முழுமையடைகின்றன என்று பொருள். ஆனால் இன்றைய நிலையில் மனித குலத்தில் பல சிக்கல்கள் காரணமாகக் குழப்பங்கள் ஏற்பட்டுள்ளன. இச்சிக்கல்களை ஆராய்ந்து அவற்றைத் திருமங்கையாழ்வாரது இலக்கியங்களில் கூறும் நன்னெறிகளின்வழி எங்ஙனம் தீர்க்க முடியும் என்று ஈண்டு நோக்குவோம்.

உலகில் சமயத்தின் பெயரால் ஏற்படும் குற்றங்களும், குறைகளும் ஏமாற்று வித்தைகளும், பொருளாதாரச் சுரண்டல்களும் மக்கள் எண்ணத்தைத் தவறான வழிகளில் திசை திருப்ப வழிவகுக்கின்றன.[1] அரசியலில் போட்டி, பொறாமை, நாகரீகமற்ற செயல்கள் ஆகியன மலிந்து அது சாதியின் அடிப்படையிலும் பொருளாதாரத்தின் அடிப்படையிலும் அனைத்து நிலையான கொள்கைகளைக் கடைப்பிடிக்கத் தவறி விட்டது. மேலும் அது சமுதாயத்தில் ஏற்படும் சிக்கல்களை உடனுக்குடன் தீர்த்து வைக்காமல் அவற்றை வளர்த்துப் பல உட்சிக்கல்களை ஏற்படுத்தி விடுகிறது.[2]

உலகில் ஒரு நாடு மற்ற நாட்டுடன் நட்புறவு கொள்ளாமல் பகைமை பாராட்டுவதால் வல்லரசுகள் உருவாகி, பொருளாதாரம், அறிவியல் வளர்ச்சி, பாதுகாப்பு ஆகியவற்றால் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன.[3] அறிவியல், கல்வி, கலாச்சாரம், பண்பாடு, மனிதனின் உள்ளார்ந்த தகவுகள், வாழ்க்கையின் நோக்கங்கள் ஆகியவற்றால் ஏற்படும் சமுதாய மற்றும் தனி மனித விருப்பு வெறுப்புகள் ஒன்றுடன் ஒன்று இணையாததால் அங்குக் கருத்து வேறுபாடுகள் ஏற்படுகின்றன.[4]

மனிதர்களில் ஒரு சாரார் தீய நோக்கங்களையும் சீர்கேடு விளைவிக்கும் பழக்க வழக்கங்களையும் கைக்கொண்டு முறைகேடான வாழ்க்கை வாழ விரும்புவதால், அவர்கள் வாழ்க்கையில் கட்டுக்கோப்பு இல்லாமல் போய்விட்டது.[5] மக்கள் பொருளாதாரத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பதாலும், அறத்தின் மேன்மையை உணராதிருப்பதாலும், அவர்கள் வாழ்க்கையில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டு அவை அரசியல், தொழில், சமயம், கல்வி ஆகிய துறைகளைத் தாக்கி, அவற்றின் புனித நோக்கங்களைக் கெடுத்து விடுகின்றன.[6] அறிவியல் கோட்பாடுகளின் அடிப்படையில் சமநோக்கு, அன்பு, அறிவு, ஒழுக்கம், ஒற்றுமை, தோழமை, தற்சார்பு, தன்னம்பிக்கை, நன்னடத்தை, கலாச்சாரம் மற்றும் பண்பாடு ஆகிய குணங்களின் அடிப்படையில் மனித வாழ்க்கை அமையாமல் சாதிக் கொடுமை, ஏழமை, பொறாமை, புறங்கூறுதல், கொலை, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள், போதைப் பொருட்களின் தாக்கம், கடமை உணர்வுடன் அறவாழ்க்கை வாழாமை ஆகிய குறைகள் நிறைந்த வாழ்க்கையாக அமைந்து விட்டது மேற்கூறிய சமுதாயக் குறைகள் காரணமாக மனிதன் தான் நினைத்ததைப் போல வாழ முடியாமல் அவற்றைப் பொறுத்துக் கொண்டு வாழ வேண்டிய காலச் சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது.

ஒரு நாடு அனைத்து நிலைகளிலும் தழைத்தோங்கி இருப்பதற்கு அங்கு மக்கள் போதுமான பொருளாதாரத் தன்னிறைவைப் பெற்றிருத்தல் அவசியம், அவர்கள் மேன்மையுறப் பொருளாதார வளர்ச்சியே அடிப்படை என்ற எண்ணம் கொள்ளாது அத்துடன் இறைவனை முன்னிருத்தும் சமயச் சார்புடைய அறவாழ்க்கையையும் கைக்கொள்ளுதல் சிறப்புடையது. ஒரு நாடு நேர்மையான வழியில் நடைபோட அங்குள்ள மக்கள் எப்படிவேண்டுமானாலும் வாழலாம் என்ற நிலை மாறி, இப்படித்தான் வாழ வேண்டும் என்று ஒரு வரையறை அமைத்துக்கொண்டு அதன்வழி வாழ்க்கையை நடத்திச் செல்லலாம். மனிதர்கள் கடைப்பிடிக்கும் அறநெறி தனிமனிதனுக்கு உகந்ததாயும் சமுதாயப் பார்வைக்கு ஏற்புடையதாயும் அமைந்திருத்தல் அவர்களுக்கு நலம் பயப்பதாய் அமையும். சுருங்கக் கூறின், பொருளாதார வளர்ச்சியையும் அறவாழ்க்கையின் மேன்மையையும் மக்கள் தங்கள் இரு கண்களெனக் கருதி அவர்களது வாழ்க்கையை அமைதியாக நடத்திச் செல்லுதல் ஏற்புடையது

ஒரு நாடு நேர்மையான முறையில் அமைந்திட அதற்கென்று என்று ஒரு நல்ல சரித்திரம் இருப்பது அவசியம். அங்கு இதற்கு முன்னர் ஏற்பட்ட சிக்கல்கள் திறன்மையான முறையில் கணிக்கப்பட்டு தீர்த்துவைத்திருத்தல் வேண்டும். மேலும் அவற்றின் அடிப்படையில் பிற்காலத்தில் அங்கு ஏற்பட இருக்கும் குழப்பங்களை இப்பொழுதே அறிந்து அவற்றை நன் முறையில் தீர்த்துவைத்திட முனைதல் சமுதாயத்திற்குத் தேவையாய் இருக்கும்.

ஒரு நாடு கட்டுக்கோப்புடன் விளங்க, அங்கு ஒரு நல்ல அரசியல் பின்னணி இருந்திடல் வரவேற்கத் தகுந்தது. மக்களால்

தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அரசியலின் முன்னணியில் நின்று மக்களை முன்னேற்றப் பாடுபடுதல் வேண்டும். தனிமனிதனுக்கோ, ஒரு குழுவிற்கோ அரசு முக்கியத்தும் கொடுக்குமேயானால் அங்கு ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டு மக்கள் வாழ்க்கை சீர்குலைய ஏதுவாகும். ஆகவே அரசு மக்களாட்சி முறையில் சமதர்மச் சமுதாயத்தை நிறுவிடப் பாடுபட முனைதல் அத்தியாவசியம் ஆகும். அரசு கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றிற்கு முதலிடம் கொடுத்து அதன் ஆளுமை கல்வி, சமுதாயம் ஆகிய துறைகளில் தலையிடாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு நாட்டைக் கட்டுப்படுத்தும் அரசு மற்ற நாடுகளுடனும் தொடர்புடையதாயும், நட்புறவு கொண்டதாயும் இருக்க வேண்டும். அத்துடன் அரசு சமுதாயத்தில் எந்தக் குறைகள் இருந்தாலும் நேர்மையான வழியில் தீர்வு காணப் பாடுபடுதல் நலம் பயக்கும்.

ஒருவனுடைய வாழ்க்கை இடம், காலம், அவனது வாழ்க்கையின் அணுகுமுறை ஆகியவற்றால் மாறிக்கொண்டேயிருக்கும் திறத்தது. அதனால் மக்களின் வாழ்க்கைப்பாதை எதிர்காலத்தில் சிறிதுசிறிதாகத் திசை திரும்பி விடும். அப்படித் திசைதிரும்பும் பொழுது அதனால் அவர்கள் முன்னேறுகின்றார்களா? அல்லது பின் தங்குகின்றார்களா? என்பதை மக்கள் சிந்தித்து, அம்மாற்றம் ஏற்புடையதாய் இருப்பின் ஏற்றும், இல்லையெனில் மறுத்தும் ஒதுக்கி விடல் வேண்டும். இதனால் சமுதாயத்தில் எந்தவித இடர்ப்பாடுகளும் இன்றி நேர்வழியில் முன்னேறிச் செல்ல முடியும்.

மக்கள் அனைவரும் சரிநிகர்சமானமானவர்கள் என்ற நிலை பொருளாதார ஏற்றத் தாழ்வுகளினாலும், 'நான்' என்னும் அகந்தை காரணமாகவும் சீர்குலைந்துவிட்டது. ஆணுக்குப் பெண் சமம் என்ற எண்ணம் மக்களிடையே இருப்பினும், ஆணுக்குப் பெண் கட்டுப்பட்டவள் என்ற நிலையே நடைமுறையில் இருக்கின்றது. கடந்த காலத்தில் பெண்களின் உரிமைகள் ஒடுக்கப்பட்டிருந்தமை மக்களின் உள்ளத்தில் தாக்கம் பெற்று விட்டபடியால் இன்றும் பெண்ணினத்திற்குக் கிடைக்க வேண்டிய உரிமைகள் மறுக்கப்படுகின்றன. ஆகவே இன்றைய சமுதாயத்தைப் பார்க்கும் பொழுது மனிதனுக்கு மனிதனும், ஆணிற்கு பெண்ணும் அனைத்து நிலைகளிலும் வேறுபட்டே இருக்கின்றார்கள். ஆனால் இந்நிலை சமுதாயத்தில் நீடிப்பின் அங்கு சிக்கல்கள் தோன்றி, மனித வாழ்க்கை குழப்பமானதாய் முடிய வாய்ப்புண்டு. ஆகவே இவ்வேற்றுமையைச் சமுதாயத்திலிருந்து களைய அனைவரும் முயலுதல் தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நலம் பயப்பதாய் அமையும்.

அரசியல், பொருளாதாரம், கல்வி, சமயம், அறிவியல் தொடர்பான, கலாச்சாரம் தொடர்பான விதிமுறைகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து மனித குலம் அமைதியாக முன்னேற்றப் பாதையில் நடைபோடுவதற்கு உதவும் வகைகளில் அமைதல் நலம். ஆனால் சமுதாயத்தில் எப்படித்தான்

நல்லமுறையில் விதிமுறைகள் அமைந்திருந்தாலும் அவை ஒரு கால கட்டத்தில் ஏற்புடையதாய் அமையாமல் போய், அதன் கட்டுக்கோப்பு சீர்கெட்டுக் குழப்பமான சூழ்நிலைகள் உருவாகி விடுகின்றன. இக்குழப்பங்கள் ஒரு நாடு முழுமைக்கும் ஏற்படாவிட்டாலும் அது முதலில் ஒரு மூலையில் தொடங்கி, முடிவில் நாடு முழுவதும் பரவி, இறுதியில் அங்கு ஒரு கொந்தளிப்பான சூழ்நிலையையே ஏற்படுத்தி விடுகின்றன. ஆகவே ஒரு நாட்டின் விதிமுறைகளை இடத்திற்கேற்பவும், மக்களின் மனநிலைகளின் மாறுபாடுகளுக்கேற்பவும், அப்பொழுதைக்கப்பொழுது சமுதாயத்தினர் மாற்றிக்கொண்டே இருக்க வேண்டியது மிகவும் அவசியமாகும் அவ்விதிமுறைகள் மக்களிடேயே ஒற்றுமையைத் தூண்டுவதாகவும் வாழ்க்கைக்கு ஏற்றதாகவும் இருக்க வேண்டும். இங்ஙனம் விதிமுறைகளைக் காலத்திற்குக் காலம் மாற்றாவிட்டால், முடிவில் ஒரு காலக்கட்டத்தில் மக்கள் வாழ்க்கை சீர்குலைந்து விடும். மேலும் மக்களாட்சியின் போக்கு சீர்குலைந்து, மக்களின் கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றில் குறைகள் ஏற்பட்டு, ஏற்கனவே அறிவியல் சார்ந்த வாழ்க்கையால் உண்டான குழப்பங்கள் மேலும் மேலும் வளர்ந்து சமுதாய வாழ்க்கையே அடியோடு மாறுபட்டு, திசைதெரியாத கப்பல் கடலில் மூழ்கி விடுமாபோல சமுதாய வாழ்க்கையும் சீர்குலைந்து விடும்.

சமுதாயம் மாறுபட்ட எண்ணங்களையும், வேறுபட்ட உணர்ச்சிகளையும், தங்களுக்கென்ற தனித்தன்மையையும் வாழ்க்கை நோக்கங்களையும் உடைய மக்கள் குழுக்கள் ஒன்றுசேர்ந்த ஒரு கூட்டுத்தொகுப்பு. இச்சூழ்நிலையில் ஒவ்வொரு குழுவும் தான் மேற்கொண்ட கொள்கைகளும் வாழ்க்கை முறைகளும் மற்றவைகளைவிட உயர்ந்தது என்ற எண்ணம் கொண்டிருப்பது இயற்கை. இதனால் ஒவ்வொரு குழுவின் இடையேயும் சண்டைச்சச்சரவுகள் ஏற்பட வாய்ப்புண்டு. இதனால் இரண்டு குழுக்களுக்கிடையே ஏற்படும் சிக்கல்கள் இன்னும் பல உட்சிக்கல்களை உருவாக்கிவிடும். இதனை ஆராயும்பொழுது இச்சிக்கல்கள் இரண்டு குழுக்களிக்கிடையே உள்ள ஒற்றுமையின்மை, ஒன்றை ஒன்று சரியாகப் புரிந்து கொள்ளாமை, மனிதனை மனிதன் மதிக்காத தன்மை ஆகியவற்றால் ஏற்படுகின்றன என்று முடிவு கூறலாம். ஆகவே இப்பிரச்சனைகளை நன்கு ஆராய்ந்து அவற்றை உடனுக்குடன் தீர்த்துவைக்க முடிவெடுக்க வேண்டும். அப்படி இல்லையெனில் மக்களிடையே கருத்து வேறுபாடுகள் வேரூன்றி வளர்ந்து, அது மாபெரும் உள்நாட்டுச் சிக்கலாக உருவாக வாய்ப்புண்டு.

மக்கள் கொண்ட கொள்கையில் பிடிப்பையும், வாழ்க்கையில் எதிர்பார்ப்புகளையும், எடுத்த செயலில் வெற்றியடைய வேண்டும் என்ற எண்ணமும் உடையவர்களுக்குப் போதுமான வாய்ப்புகளை அச்சமுதாயம் கொடுக்கத் தவறினால், அவர்கள் தங்கள் வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு சமுதாயத்திலிருந்து விலகி தங்களுக்கென்ற தனிப்பட்ட பழக்க வழக்கங்களை மேற்கொண்டு சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல்

தான் தோன்றித்தனமாய் வாழ்க்கையை அமைத்துக் கொள்வார்கள். மேலும் அவர்கள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டமாக வாழ்ந்து தங்களுக்கென்று தனி நாகரீகம், கலாச்சாரம் ஆகியவற்றை உருவாக்கிக் கொள்வர். இந் நிலை தொடருமானால் முடிவில் சமுதாயத்தில் அமைதி குலையும். எனவே இக்குறைகளைச் சமுதாயத்திலிருந்து போக்க உடனடியாக நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும்.

ஒரு சாரார் எப்பொழுதும் பொதுவான வாழ்க்கையிலிருந்து ஒதுங்கியே இருக்கின்றார்கள். இவர்களைப் போதைப் பொருட்களின் மீது நாட்டம் கொள்பவர்கள், இளவயதிலேயே சிறுசிறு குற்றங்களைச் செய்பவர்கள் என்று இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இவர்களால் மற்றவர்களுக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ தீங்குகள் விளைந்திட இடமுண்டு. இவர்களை முறைப்படி தண்டித்து அவர்களது குறைகளை நீக்கி அவர்களையும் மக்களில் ஒருவாரகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இதனைக் கருத்தில் கொண்டு கல்வி நிறுவனங்களும் மக்கள் சேவா நிலையங்களும் இவர்களுக்குத் தகுந்த முறையில் அறிவுரை வழங்கி அவர்களது மனதைத் திருத்த வேண்டும் அங்ஙனம் திருந்தியவர்களை மக்கள் ஒதுக்கி விடாமல் தங்களுடன் இணைத்து மீண்டும் அவர்களைக் குற்றம் செய்யாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

இன்றைய நிலையில் சமுதாயத்தின் உள்ளீடாக ஒட்டுமொத்தமான ஒரு கட்டுக்கோப்பு இல்லாமல் பல பிரிவுகள் ஏற்பட்டுள்ளன. ஒவ்வொரு பிரிவின் இடையிலும் மாறுபட்ட கருத்துகள் நிலவி வருவதால் சமுதாயத்தில் அமைதியான வாழ்க்கைக்கு இடமில்லாமல் போய்விட்டது. உலகில் மக்கள் விஞ்ஞான வளர்ச்சியாலும் பொருளாதார முன்னேற்றத்தினாலும் தங்களைவிட உயர்ந்தவர்கலோ, எதிரிகலோ இருக்கக்கூடாது என்ற எண்ணத்தினாலும் ஆக்கபூர்வமான முறையில் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாமல் அழிவுப் பாதைக்கே வழிவகை செய்கின்றனர்.[8] அத்துடன் ஒரு நாடு மற்ற நாட்டை விட அனைத்து நிலைகளிலும் தழைத்தோங்கி இருக்க வேண்டும் என்று நினைக்கின்றது. இதனால் இரு நாடுகளுக்கிடையில் ஒற்றுமையைவிட, காழ்ப்புணர்ச்சியே மேலோங்கியிருக்கின்றது. இந்நிலை மாற உலகில் பொருளாதார, சமுதாய, அரசியல் மற்றும் சமயத்தின் அடிப்படையில் ஏற்பட்டுள்ள கருத்து வேறுபாடுகளைக் களைந்து உலகம் முழுவதும் ஒரே சமுதாயமாகக் காண வழிகாணுதல் வேண்டும். இந்நிலையில் உலகில் நடந்த பல நிகழ்வுகளை ஆராயும்பொழுதும் உலகப் போர்களை நோக்கும் பொழுதும் அனைவருக்கும் பொதுவான இறைவனது இருப்பை முன்வைத்தே அதன் பின்னணியில் உலகச் சிக்கல்களுக்குத் தீர்வு காண வேண்டும் என்ற கருத்து தெளிவாகின்றது. இதற்கு எடுத்துக்காட்டாக முதன்முதலாக சோவியத் உருசியாவின் தலைவர் விலாடிமிர் கர்பசேவ் அவர்கள் *1987* ஆம் ஆண்டு திசம்பர் திங்கள் *11*-ஆம் நாள் அமெரிக்கா சென்று அதன் தலைவர் உரோனால்ட் ரீகனுடன் நாடுவிட்டு

நாடு செல்லும் ஏவுகணைகள் கட்டுப்பாட்டு ஒப்பந்தத்தில் 'கடவுளின் பெயரால்' என்று சொல்லிக் கையொப்பமிட்ட நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம்.

திருமங்கையாழ்வார் சமுதாயச் சிக்கல்களைப் போக்க நேரடியாக வழிமுறைகளைக் கூறாதிருப்பினும் மறைமுகமாகக் கூறியுள்ளார் என்று கொள்ள இடமிருக்கிறது. இவ்வாழ்வாரின் பாடல்கள் அனைத்தும் மனிதன் இறைவனை அடையும் வழிமுறைகளைப் பற்றியதாகவே அமைந்திருக்கின்றன. ஆனால் மனித வாழ்க்கை இறையுலகை நோக்கியதாகவே அமையும் நிலையில் தமது பனுவல்களை அருளியுள்ளார். இப்பின்னணியில் அவரது பாடல்கள் எங்ஙனம் சமுதாயம் முன்னேற்றமடைய தேவையான கருத்துக்களைக் கொண்டிருக்கின்றன என்ற கேள்வி எழும். இதற்கு அவரது பாடல்களை ஆராய்வதால் தக்க விடையைக் கருதலாம்.

மனித வாழ்க்கை மறுவுலகை நோக்கியதாக அமையின் மனிதன் இச்சமுதாயத்தில் செம்மையாக வாழ்ந்துள்ளான் என்று அறியப்பெறுகிறது. மாறாக, சமுதாயம் சீர்கெட்டிருக்குமானால் அங்கு வாழும் மனிதன் மன அமைதியுடன் வாழ முடியாது. மன அமைதி இல்லையெனில் அங்கு இறையெண்ணம் குடிகொள்ளாது. இறையெண்ணம் மனதில் இல்லையெனில் அவன் இயல்பாகவே மறுவுலகைப்பற்றி எண்ணமாட்டான். திருமங்கையாழ்வாரது பாடல்களை நோக்கும்பொழுது ஓர் உண்மையை அறிய முடிகிறது. ஆழ்வாரது கருத்துப்படி, மறுவுலகம் என்பது இவ்வுலகின் தொடர்ச்சியாக அமைவதே ஆகும். இகவுலகின் முடிவு மறுவுலகம் மேலும் ஆழ்வார்களது பாடல்களின் அடிப்படையில் தோன்றிய விசிஷ்டாத்துவிதம், அசேதனப் பொருளான இப்பிரபஞ்சத்தை ஸ்ரீமன் நாராயணனுடைய உடம்பாகவே கருதுவதுடன், அவன் பிரபஞ்சத்தின் ஒவ்வொரு அணுவின் ஊடாகவும் அந்தர்யாமியாக இருக்கின்றான் என்கிறது. இந்நிலையில் மறுவுலகம் இவ்வுலகின் தொடர்ச்சியே என்பது ஏற்புடையது. இப்பின்னணியிலேயே திருமங்கையாழ்வாருடைய நோக்கம் மறுவுலகை நோக்கியதாக இருப்பினும் அதன் ஊடாக இவ்வுலகத் தொடர்புடைய சமுதாயப் பார்வையும் இருந்தது என்று கொள்ள இடமாகிறது.

திருமங்கையாழ்வாருடைய பாடல்களில் சமூகநோக்கு இருக்கின்றது என்பதை வேறுவகையாகவும் கருதலாம். பக்தன் தான் எடுத்தப் பிறவிகளில் சேர்த்து வைத்திருக்கும் தீவினைகளை இப்பிறவியில் வாழ்வாங்கு வாழ்ந்து முறைப்படி அழித்து இல்லை செய்தாலன்றி மறுவுலகை அடைய முடியாது. அவன் தன் வினைப்பயனை இல்லை செய்வதற்கு இவ்வுலகில் செம்மையாக இறைவழிப்பட்டுச் செம்மையாக வாழுதல் வேண்டும். அதற்கு இச்சமுதாயம் சீருடனும் சிறப்புடனும் இருந்திடல் வேண்டும். ஆகவே ஒருவன் சமுதாயத்தில் சிறப்புடன் வாழ்வதாலேயே மறுவுலகை அடைய முடியும். இப்பின்னணியில் அவரது பனுவல்களைப் பார்க்கும் பொழுது நேரடியாக அவை மறுவுலகை

நோக்கியதாயினும் மறைமுகமாகச் சமுதாயக் கருத்துக்களை உள்ளடக்கியதாகக் கருதலாம் இவ்வுண்மையை ஆழ்வார், எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணன் குடிகொண்டிருக்கும் திருக்கோவில்களின் சுற்றுப்புறத்தையும், அவை இருக்கும் நகரங்களையும், நகரங்களில் வாழும் மக்களையும், அந்நகரங்களை ஆளும் மன்னர்களைப் பற்றியும் கூறிடும் பாடல்களைப் பகுத்து ஆராயும்பொழுது அறியலாம். சுருங்கக் கூறின், இச்சமுதாய வாழ்க்கை அனைத்து வகைகளிலும் இறைவனை முன்னிருத்தி இறைச்சமுதாயமாக விளங்க வேண்டும் என்ற திருமங்கையாழ்வாருடைய ஆவல் அவரது ஒவ்வொரு பனுவலின் ஊடாக விரவியிருப்பதைப் பகுத்துக் கருதுவதால் அறியலாம்.

திருமங்கையாழ்வார் சமுதாயக் கருத்துக்களை அவரது பாடல்கள் அனைத்தையும் கொண்டு கூட்டிப் பொருள் கருதுவதாலே அறிய முடியும். இவ்வுண்மைக்கு எடுத்துக்காட்டாக இவ்வாழ்வாரது பெரிய திருமொழிக்குத் தனியன் பாடிய ஆழ்வான்,

"நெஞ்சுக் கிருள்கடி தீபம், அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல வமுதம், தமிழநன் னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரண சாரம், பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறிபர காலன் பனுவல்களே"

என்று பாடுவதைப் பகுத்து ஆராய்வதால் தெளியலாம். இதனை நோக்கும் பொழுது ஆழ்வான் இவருடைய திருமொழியின் புகழை மனிதனுடைய அறியாமையிருளைப் போக்கவல்லது, பிறவியைத் தடுத்து இறையுலகை அடைய வழிகாட்டுவது என்றும், தமிழ் இலக்கியங்களில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகியவற்றை முறையாகப் பெற்று விளங்கும் ஒரு பேரிலக்கியம் என்றும் புகழ்கின்றார். இதிலிருந்து இவருடைய இலக்கியத்தை சமுதாயப் பார்வைக்கு உட்புகுத்தும்பொழுது, அவை மனிதனின் உண்மை நோக்கம், வாழும் வகை, உய்யும்வழி ஆகியவற்றைச் சிறப்புறக் கூறுகின்றது என்று கொள்ளலாம். இவரது பனுவல்களை நோக்கும்பொழுது, இவர் கூறும் வழிகளில் ஒருவன் வாழ்ந்தால் அவனைத் தீவினையென்பது என்றும் அனுகாது என்ற வகையில்,

"அரிய இன்னிசை பாடுநல் லடியவர்க்
கருவினை யடையாவே"

என்று கூறுகின்றார். அத்துடன் இவர் கூறும் வழிகளில் நடப்பின் பக்தன் உலகப் பற்றினை விடுத்து இறைவனடி சேருவான் என்பதை,

"கற்றேன் பாய்த்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே!
என்ற இடத்தில் தெளிவாகக் கூறுகின்றார். இவர் கூறும் வழிகளை ஒருவன்

கடைப்பிடிப்பின் அவன் இவ்வுலக மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவான் என்புதை,

"ஒற்றினொடும் ஒன்றுமிவை கற்றுவல்லார் உலகத்
துத்தமர்கட் குத்தமராய் உம்பருமா வர்கறே" [12]

என்று கூறுகின்றார். மேலும் இவர் கூறும் வழிகளைக் கடைப்பிடிப்பவன் என்றும் இறைவனையே தன் மனத்துள் எண்ணியிருப்பான். அதனால் அவன் மறந்தும் தீய செயல்களை எண்ணமாட்டான். மேலும் இவ்வாழ்வார் கூறும் வாழ்க்கையைக் கடைப்பிடிப்பவன் பிறவியிலேயே கொடுங்குணம் உடையவனாய் இருப்பினும் அவன் இறையறிவு பெற்று ஏற்றமிகு வாழ்வு வாழ்வான் பிறவியிலேயே அரக்கர்களான இலங்கையர்கள் மனம் திருந்தினர் என்ற வகையில்,

"ஏத்து கின்றோம் நாத்த ழும்ப, இராமன் திருநாமம்
சோத்தம், நம்பீ! சுக்கி ரீவா! உம்மைத் தொழுகின்றோம்" [13]

என்று அவர்கள் கூறியதாக இவ்வாழ்வார் கூறுகின்றார். மேலும் தாம் கூறிய நன்னெறிகளைக் கடைப்பிடிப்பவன் நிச்சம் வீட்டுநிலையை அடைவான் என்பதை,

"என்றானும் எய்தார், இடர்; இன்ப மெய்தி
இணையோர்க்கு மப்பால் செலவெய் துவாரே"

என்று இவ்வாழ்வார் கூறுகின்றார். அத்துடன் இவர் மக்களுக்குச் சேவை செய்வதன் மூலம் இறைவனடி சேரலாம் என்பதை,

"தொண்டேல்லாம் பரவி நின்னைத்
தொழுதடி பணியு மாறு
கண்டு தான் கவலை தீர்ப்பான்" [15]

என்று கூறுகின்றார். ஆகவே இவர் கூறும் வழிகளில் தனி மனிதன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்வானானால் இறுதியில் சமுதயாம் நிச்சயம் மேன்மையடையும்.

திருமங்கையாழ்வார் தம் இலக்கியத்தைக் குறிப்பிட்ட ஒரு மனிதனுக்காகவோ குறிப்பிட்ட ஒரு நாட்டிற்காகவோ படைக்காமல் உலக மாந்தர்களுக்காக இயற்றியுள்ளார். இவர் தாம் பெற்ற இறையின்பம் இவ்வுலக மக்கள் அனைவரும் பெற வேண்டும் என்ற பரந்த நோக்கத்தின் அடிப்படையில்தான் தம் உணர்வுகளைப் பாடல்களாகப் பாடியுள்ளார். இவரது

பனுவல்களைப் படிக்கும் அனைவரும் இவ்வுலகியல் வாழ்க்கையின் உண்மையை உணர்ந்து அதன்வழி இறையுலக வாழ்க்கையின் மேன்மையை அறிந்து வீட்டுநிலையை அடைவர் என்பது திண்ணம். இக்கருத்தினை ஒவ்வொருவரும் அறிந்து கொள்வார்களானால் தனிமனிதன் முன்னேறி அதனால் ஒரு நாடும் முன்னேறும் என்பது வெள்ளிடைமலை. இதனால் மக்கள் நீதி, நேர்மை, இறைநம்பிக்கை ஆகிய நன்னெறிகளைக் கடைப்பிடித்து உலக ஒற்றுமையுடன் வாழ்வர். உலகில் வேற்றுமை எண்ணங்கள் தோன்றினாலும் மனிதாபிமானத்தின் அடிப்படையில் ஒற்றுமை ஏற்பட்டு அங்கு அமைதி நிலவும். இந்நிலையில் ஒற்றுமை எண்ணங்களுக்குத் தேவையான கருத்துக்கள் இவ்வாழ்வாருடைய இலக்கியத்தின் உள்ளீடாக விரவியுள்ளன.

சமுதாயத்தில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற நிலை பொருளாதாரத்தின் அடிப்படையிலும், சாதியின் அடிப்படையிலும் அமையாமல், ஒழுக்கம், கடமை, உணர்வு மற்றும் மனித நேயம் ஆகியவற்றின் அடிப்படையிலேதான் அமைகின்றது. இறைவனை முன்வைத்து வாழுகின்றவர்கள் மேற்குறிப்பிட்ட ஒழுக்கத்தையும் கடமையையும் உயிரெனக் கருதி தங்கள் வாழ்க்கையை நடத்திச் செல்வர் என்பது பொதுவான கருத்து. இறைவன் பெருங்கருணை உடையவன். இறைவனுக்கு மக்களில் வேறுபாடு என்பது இல்லை. இறைவனிடம் பக்தி செய்பவர் அனைவரும் இவ்வுலகிலும் இறையுலகிலும் சமமானவர்கள். ஆகவே இறைவனுக்கு சமுதாயத்தில் வேண்டுபவர் வேண்டாதவர் என்று இல்லை. இக்கருத்தினை இவ்வாழ்வார் தம் இலக்கியத்தில் பொதுவாகக் குறிப்பிடினும் ஒரு சில இடங்களில் நேரடியாகவே குறிப்பிடுகின்றார் என்று கருதலாம். இவர் இறைவன் ஏழை, பகைவன், கீழ்மகன் என்று வேறுபாடு கருதாமல் பக்தன் என்ற நிலையில் தன் அருளினைக் குறைவின்றி அனைவருக்கும் நல்குகின்றான் என்ற உண்மையை,

"ஏழை ஏதலன் கீழ்மகன் என்னா
 திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து
மாழை மான்மட நோக்கியுன் தோழி;
 உம்பி எம்பி' என் றொழிந்திலை உகந்து,
தோழன் நீயெனக் கீங்கொழி,' என்ற
 சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட
ஆழி வண்ண! நின் அடியிணை யடைந்தேன்--
 அணிபொ ழில்திரு வரங்கத்தம் மானே!" [16]

என்ற பாடலிலே வெளியிடுகின்றார். இவர் மனிதர்களில் வேறுபாடு இல்லை என்று குறிப்பிடுவதுடன் உலகில் தோன்றிய அனைத்து உயிர்களும் சமம் என்ற கருத்தையும் தம் இலக்கியத்தில் குறிப்பிடுவது இங்குச் சிந்திக்கத் தக்கதாகும். இவ்வாழ்வார் இராமபிரான் குரங்கினமான அநுமனை மனிதனல்லாத வேறு சாதி என்று ஒதுக்காமல் தன்னிடம் பிரபத்தியால்

சரணடைந்தவன் என்ற தன்மையில் அன்பு பாராட்டுகின்றான் என்ற கருத்தை,

"வாத மாமகன் மர்க்கடம் விலங்கு
  மற்றோர் சாதியென் றொழிந்திலை உகந்து
காதல் ஆதரம் கடலினும் பெருகச்
  செய் தகவினுக் கில்லைகைம் மாறென்று
'கோதில் வாய்மையி னாயொடு முடனே
  உண்பன் நான்' என்ற ஒண்பொருள் எனக்கும்
ஆதல் வேண்டுமென் றடியிணை யடைந்தேன்—
  அணிபொ ழில்திரு வரங்கத்தம் மானே!" [17]

என்ற பாடலிலே வைக்கின்றார். இக்கருத்தை விரித்து ஆராயும்பொழுது, இறைவனுடையக் குணங்களை அறிந்து அவனிடம் பக்தி கொள்வதுடன் அவனிடம் முழுமையான ஆழ்ந்த நம்பிக்கைக் கொண்டு தன்னையே அவனிடம் சந்தேகத்திற்கு இடமில்லாமல் ஒப்புவித்து பிரபத்தி கொண்டால் இறைவன் அப்பக்தனை உலக இடர்பாடுகளிலிருந்து காப்பாற்றி அவனுக்கு வீட்டு இன்பத்தைக் குறைவின்றி அளிப்பான் என்ற உண்மை வெளிப்படுவதாகக் கொள்ளலாம். இவர் இராமபிரான் அநுமனுக்குக் காட்டிய அன்பு நிலையைத் தமக்கும் காட்ட வேண்டும் என்று அவனிடம் பிரபத்தி கொண்டு இறைஞ்சித் திருவரங்கத்தம்மானின் திருவடிகளைப் பற்றுகின்றார். மேலே குறிப்பிட்ட பாடலி லிருந்து மனிதர்களில் வேற்றுமை என்பது இல்லை, அனைத்து உயிர்களும் சமம் என்ற பேருண்மைகள் தெளிவாகின்றன. இதனை மக்கள் அனைவரும் உணர்ந்தால் சமுதாயத்தில் வேறுபாடுகள் இல்லை என்ற நிலையும், அப்படித் தோன்றினாலும், அவை மனித நேயத்தின் அடிப்படையில் அனைவரும் சமம் என்ற முடிவும் கைகூடும்.

இவ்வாழ்வாருடைய அனைத்துப் புனுவல்களும் இறைவனைப் போற்றும் வகைகளிலே அமைந்துள்ளன. அங்ஙனம் போற்றும்பொழுது இவர் இறைவனை உலக மாந்தர்களுக்குப் பொதுவானவன் என்ற முறையில்,

"குவலயத் தோர்தொழு தேத்தும்
ஆதியை, யமுதை, என்னை யாளுடை
  அப்பனை" [18]

என்றும்,

"தேசமெல் லாம்வணங்கும் திருமாலிருஞ் சோலைநின்ற" [19]

என்றும் கூறி வணங்குகின்றார். ஆகவே இவ்வாழ்வார் உலக மக்களைப் பொதுவாக வைத்து இறைவனைப் போற்றிப் புகழ்வதால் அப்படிப் போற்றிப் புகழும் பொழுது வெளிப்படும் அனைத்து நீதிகளும் உலகத்தோர் தங்கள் வாழ்க்கையில் உய்யவே வழிகாட்டுகின்றன என்று முடிவுறுத்தலாம்.

இவ்வாழ்வார் மனித வாழ்க்கையின் உண்மையை உலக மாந்தர்களுக்கு எடுத்துக் கூறும்பொழுது,

"இப்பிறப் பறியீர், இவரவ ரென்னீர்,
இன்னதோர் தன்மையென் றுணரீர்" [20]

என்று கூறுகின்றார். அழியும் உலகப் பொருள்களின்மீது பற்று வைப்பதினால்தான் மனிதர்களுக்கு வாழ்க்கையில் சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஒருவன் அப்பற்றை விடுத்து இறைவனின் திருவிருப்பத்தின் அடிப்படையில் வாழ்வானாயின் அவனுக்கு வாழ்க்கையில் துன்பம் என்பதே ஏற்பட இடமில்லை. அதேபோல் மற்றவர்களிடத்துப் பாசத்தையும் வாழ்க்கையில் நேர்மையையும் தங்கள் இரு கண்களெனக் கடைப்பிடிக்கும் சமுதாயத்திற்குத் துன்பம் என்பதே ஏற்படாது. சமுதாயத்தில் சண்டைச் சச்சரவுகள் இல்லையெனில் அங்கு ஒற்றுமையும், எதனையும் மற்றவர்களுக்காக விட்டுக் கொடுக்கும் நல்ல பழக்கமும் உண்டாகும். இக்கருத்தினை இவர்,

"நாச மான பாசம் விட்டு நன்னெறி நோக்கலுறில்
வாசம் மல்கு தண்துழாயான் வதரி வணங்குதுமே" [21]

என்ற வரிகளில் வெளிப்படுத்துகின்றார். இறையெண்ணத்தை அடித்தலமாகக் கொண்ட வாழ்க்கையை வாழ்பவர்களுக்குத் தீமைகளும் அதனால் விளையும் தீவினைகளும் சென்று சேரமாட்டா என்பதை இவ்வாழ்வார்,

"செங்கை யாளன் செஞ்சொல்மாலை வல்லவர் தீதிலரே" [22]
என்று அழகுற எடுத்துரைக்கின்றார்.

மக்களில் பிறப்பால், வளர்ப்பால், சுற்றுப்புறச் சூழலால் ஒரு சாரார் நேர்மையான வாழ்க்கை வாழுதலை விடுத்து தீய பழக்கங்களைக் கைக்கொண்டு முறைகெட்ட வாழ்க்கை வாழ்வதால் சமுதாயத்தின் அமைதியும், அதன் கட்டுக்கோப்பும் சீர்கெட்டு விடுகின்றது. ஆனால் அவர்கள் இவ் வாழ்வாருடைய பனுவல்களைப் படிக்கும்பொழுது அவர்களிடம் இறையெண்ணம் தழைத்தோங்கி நேர்மையான வாழ்க்கை வாழ்வார்கள். முதலில் தீய பழக்கங்களைக் கைக்கொண்டு பின் இறையருளால் செம்மையான வாழ்க்கையைக் கடைப்பிடித்தற்கு இவ்வாழ்வாருடைய தனிப்பட்ட வாழ்க்கையையே உதாரணமாகக் குறிப்பிடலாம். இவ்வாழ்வார் நீதியற்ற வாழ்க்கை வாழ்ந்து பின் இறைவனின் திருவருள் பெற்றுச் சான்றோராக் விளங்கியமையை,

"ஏணிலேன் இருந்தேன்; எண்ணினேன்; எண்ணி
இளையவர் கலவியின் திறத்தை
நாணினேன் வந்துன் திருவடி யடைந்தேன்" [23]

என்று கூறும் இவர் கூற்றிலிருந்து தெளிவாக அறியலாம். இவ்வாழ்வாருடைய அரிய கருத்துக்களை ஏற்று அதன்வழி வாழ்ந்தால் இவரைப் போலவே தீய பழக்கங்களை ஒருவன் முதலில் கொண்டிருந்தாலும் பின் அவன் அதனைக் கைவிட்டு நன்னெறியுடன் இன்பமாய் வாழலாம் என்பதை இவர்,

"சொன்னசொன் மாலை பத்துடன் வல்லார்
சுகம்இனி தாள்வர்வா னுலகே" [24]

என்ற வரிகளில் எடுத்துரைக்கின்றார். தீய பழக்கங்களைக் கைக் கொண்டால், அதனால் விளையும் தீவினைகளால் ஒருவன் பிறவிப் பெருங்கடலில் மூழ்கி விடுவான். ஆகவே ஒருவன் நன்னெறிகளுடன் கூடிய வாழ்க்கையை வாழுதலே அவனுக்கு நன்மை பயக்கும். இதனைச் சுருக்கமாக இவ்வாழ்வார்,

"பாட நும்மிடைப் பாவம்நில் லாவே" [25]
என்ற வரிகளில் எடுத்துரைப்பது ஈண்டு சிந்திக்கத்தககது.

ஒருவன் தீயவழிகளில் ஆட்படுவதற்குக் காரணம் அவன் தன் புலன்களைக் கட்டுப்படுத்தாது அவற்றின் போக்கில் விட்டு விடுதலே. அதே சமயம் அவன் தன் புலன்களைக் கட்டுப்படுத்தின் முறையாக அவன் மனம் நெறிப்பட்டு அவனது அகங்கார எண்ணம் அழிந்து முடிவில் இறைநிலைக்கு உயருவான். இதனை இவ்வாழ்வார்,

"எறிந்தேன் ஐம்புலன்கள் இடர்தீர எறிந்துவந்து
செறிந்தேன் நின்னடிக்கே" [26]

என்று சுட்டுகின்றார் ஆகவே இவரைப் போன்று ஒவ்வொருவரும் தங்கள் தங்களை அறிய முற்படின் முடிவில் மனித சமுதாயம் இறைமைச் சமுதாயமாக மாறும் என்று கொள்ளலாம்

மனிதன் இறைவனை வணங்கிப் பக்தி செய்தால் இறைவன் அவனுக்கு அருள்பாலித்து நன்னெறிகள் காட்டிடுவான். இந்நிலையில் மனிதன் தீய பழக்கங்களைக் கைக்கொண்டிருப்பினும் இறைவனிடம் சரணடைவதால் அவற்றை ஒழித்து அவன் நல்ல பழக்கங்களைக் கடைபிடிப்பான் இதனை மக்கள் தெரிந்து அதன்படி வாழ்ந்தால் அவர்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாக முன்னேறுவர் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை இக்கருத்து இவ்வாழ்வாருடைய,

"தீவினைகள் போயகல அடியவர்கட் கென்றும்
அருள் நடந்து" [27]

என்ற வரிகளில் வெளிப்படுவது சிந்திக்கத் தக்கதாகும். இவ்வாழ்வார் தாமே

தீய பழக்கங்களைக் கெண்டிருந்து பின் நல்லோராக மாறியமையை,

"கள்ளத்தேன், பொய்யகத்தேன்; ஆதலால்
போதொருகால் கவலை யென்னும்
வெள்ளத்தேற் கென்கொலோ? . . . . .
. . . . . . . . . . . . . . . . .
எம்பெருமான் தாளை நாளும்
உள்ளத்தே வைப்பாருக் கிதுகாணீர் - -
என்னுள்ளம் உருகு மாறே" [28]

என்றும்

"முன்னம்சேர் வல்வினைகள் போக முகில்வண்ணன்
பொன்னம்சேர் சேவடிமேல் போதணியப் பெற்றோமே!" [29]

என்றும் கூறும் கூற்றிலிருந்தும் தெளிவாக அறியலாம்.

திருமங்கையாழ்வார் கூறும் வழிகளில் மனிதன் தன் வாழ்க்கையை நடத்திச் செல்வானாயின் அவன் அனைத்து உயிர்களையும் தன் இன்னுயிரெனக் கருதிச் சமதர்மச் சமுதாயத்தை அமைப்பான். சமுதாயத்தில் நிலவிடும் பொதுவான வாழ்க்கையும், அதன் நோக்கமும் மக்களின் உள்ளுணர்வை வெளிப்படுத்துவதாக அமையும். அதே சமயம் சமுதாயப் பாங்கை காலத்திற்குக் காலம் மனிதர்களது எண்ணங்களின் மாறுபாடுகளுக்கேற்ப மாறிக் கொண்டே இருக்கும். இத்தன்மையிலும் நேர்மையான முறையில் அமைந்திடும் சமுதாயம் எதிர்ப்படும் அனைத்துத் தடைகளையும் தாண்டிக் கொண்டு முன்னேற்றப்பாதையில் நடைபோடும் என்று நம்பலாம்.

மனிதன் மனிதனாய் இருக்க அவன் மற்ற உயிரினங்களைச் சரிசமமாக எண்ணுதல் வேண்டும். மற்ற உயிர்கள் அனைத்தையும் தன் உயிர்போலக் கருதினால்தான் முடிவில் மனிதன் தன் ஆன்ம உணர்வைப் பெற முடியும். இக்கருத்தின் அடிப்படையிலேதான் அன்பு இவ்வாழ்வாருடைய மனதில் கொப்பளிக்க அதன் வெளிப்பாட்டால் உலகத்து உயிர்களில் இறைவனைக் கண்டு அதன்வழி தம் பனுவல்களை இவ்வாழ்வார் இயற்றினார் என்று கூறலாம்.

ஒரு சமுதாயம் சமதர்ம நெறியைக் கடைப்பிடிக்கின்றது என்றால் அங்கு அனைவரும் முன்னேறுவதற்கான வாய்ப்புகளும் வசதிகளும் இருக்கின்றன என்று பொருள். இவ்வகையில் முன்னேறிவரும் சமுதாயத்திலே மக்கள் தங்களிடையே வேறுபட்ட கருத்துக்களைக் கொண்டு அவர்கள் தங்கள் வழியில் மற்றவர்களுக்கு இடையூறாக நிற்காமல் சமுதாயத்தில் ஒருவருக்கொருவர்

ஒற்றுமையாய் இருந்து உதவிகள் செய்து வாழ்வாங்கு வாழ்ந்து அனைவரும் ஒட்டுமொத்தமாக முன்னேறுவர்.

இறைவனை முன்வைத்து நடக்கின்ற சமுதாயத்தில் குறைகள் என்பதே இருப்பதற்கு இடமில்லை எனலாம். அத்துடன் மக்களிடம் குற்றங்கள் செய்யும் மனநிலை குறைய அதிக வாய்ப்புகள் உண்டு. அப்படிச் சமுதாயத்தில் குற்றங்கள் இருப்பின் அவை சமுதாய முன்னேற்றத்திற்குக் கேடு விளைவிக்கும் நிலையில் வலுவுள்ளதாக இருக்காது. அதே சமயத்தில் இவ்வகையில் அங்கு நிலவிடும் சிறுசிறு குற்றங்களை ஒரு பொருட்டாகக் கருதாமல் விட்டோமானால் அவை வளர்ந்து முற்றி ஒரு காலத்தில் சமுதாய நலனிற்கே கேடு விளைவிக்கும் அளவிற்கு வளர்ந்து விடலாம். ஆகவே சமுதாயத்தினர் இறைவனை முன் வைத்து வாழ்க்கையை நடத்தினால் அங்குச் சிறுசிறு குற்றங்கள் நடப்பினும் அவற்றை அவர்கள் உறுதியாக ஒடுக்க வழிகாண முற்படுவர்.

மனிதன் இறைநம்பிக்கையுடையவனாக, மற்ற உயிர்களிடத்து அன்பு பாராட்டுபவனாக, நேர்மையான வாழ்க்கை வாழ்பவனாக இருக்க வேண்டும். இப்படிப்பட்ட உணர்வுடைய மக்கள் அமைந்த சமுதாயத்தில் எந்தவிதமான சிக்கலும் இராது என்று நாம் கொள்ளலாம். அப்படி இருப்பினும் அவை உடனக்குடன் தீர்த்து வைக்கப்பெறும் அதனால் மனிதன் மனிதனுடனும், ஒரு நாடு மற்ற நாட்டுடனும் நட்புறவு கொண்டு ஒற்றுமையுடன் இன்பமாய் வாழ முடியும். உலகில் ஒற்றுமை நிலவின் சமுதாயப் பார்வையில் முடிவெடுக்கப்படும் ஒரு செயல் தனி மனித நோக்கத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பதாகவும், தனிமனிதப் பார்வையில் எடுக்கப்படும் முடிவு சமுதாய நோக்கற்கு ஏற்புடையதாகவும் அமையும்.

மக்கள் உண்மையைத் தங்கள் முழு மூச்சாகவும், நீதி நேர்மையைத் தங்கள் இரு கண்களாகவும் மதித்து வாழ்ந்தார்களானால் அவர்களிடையே நல்ல நாகரிகம், காலச்சாரம் ஆகியன தோன்றும். இவ்வாழ்வாருடைய பனுவல்கள் தனிமனித வாழ்க்கை அறத்தின்பாற் பட்டதாக இருக்க வேண்டும் என்ற வகையில் அமைந்திருக்கின்றன என்று நாம் ஊகிக்கலாம். தனி மனித வாழ்க்கை அறத்தின்பாற் பாட்டதெனின் சமுதாயமும் அறத்தின்வழிப் படுமென்பது கண்கூடு. அறக்கொள்கைகள் சமுதாயத்தின் அரசியல், பொருளாதாரம், சமயம் ஆகிய துறைகளைச் செம்மைப் படுத்திச் சமுதாய வாழ்க்கை நேர்மையான வழிகளில் அமைத்திட வழிவகுக்கும்.

# இறைவனுடைய அவதார நோக்கம்

அவதாரம் என்பது இறைவன் தன் உயர்நிலையிலிருந்து கீழிறங்கி உலக சக்தியாக மாறி நல்லவை நடக்க உதவி செய்யும் நிலையைக் குறிக்கும்.[1] பகவத் கீதை, எப்பொழுது எங்கு தருமம் அழிந்து அதர்மம் தலைதூக்கிச் சமநிலை தடுமாறுகின்றதோ அப்பொழுது அங்கு திருநாராயணன் அவதாரம் எடுத்துத் தருமத்தினையும், அதனைச் செய்பவர்களையும் காப்பான் என்று கூறும்.[2] பாகவத புராணம், உலகம் அழியும் காலத்துக் திருநாராயணன் யோகமாயையின் மூலம் அவதாரம் எடுத்து, இராசத, தாமச குணங்களை அழித்து, சத்துவ குணத்தினை நிலைநிறுத்தி வேதங்களைப் பாதுகாத்து, மீண்டும் உலகில் படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய தொழில்களை முறைப்படுத்துகின்றான் என்று செப்பும்.[3]

உலகம் ஒரு முறையாக இயங்கத் திருநாராயணன் பர, வியூக, விபவ, அந்தரியாமித்துவ, அர்ச்சை என்று ஐந்து நிலைகளில் உலகத்துடன் ஒன்றாக இருக்கின்றான்.

இறைவன் விபவக் கோட்பாட்டின் வழி பரவாசுதேச நிலையினின்றும் கீழிறங்கி உலகை உய்விக்க மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், திருவிக்ரமன், பரசுராமன், தசரதராமன், பலராமன், கிருட்டிணன், கல்கி என்று பத்து அவதாரங்களைக் கிரத, திரேத, துவாபர, கலியுகம் ஆகிய நான்கு யுகங்களில் எடுக்கின்றான். இவற்றில் கலியுகத்திற்குரிய கல்கி அவதாரம் இனி நிகழ இருக்கின்றது. ஆயினும் திருமங்கையாழ்வார் இவ்வதாரச் சிறப்புக்களைப் பாடும்பொழுது, கல்கி அவதாரத்தைப் பற்றிய சிறு குறிப்புகளை மட்டும் தம் இலக்கியத்தில் ஓரிரு இடங்களில் சுட்டுகின்றார்.[4] ஆகவே கல்கி அவதாரத்தை விடுத்து, திருநாராயணன் மற்ற அவதாரங்கள் எடுத்து உலகில் நல்லவை நடக்க முன்மாதிரியாக அமைந்தமை பற்றி இவ்வாழ்வார்து பனுவல்களின் வழி ஈண்டு விவரிக்கலாம்

## மச்ச அல்லது மீன் அவதாரம்

திருநாராயணன் முதன்முதலாக எடுத்த அவதாரம் மச்ச அவதாரம் ஆகும். ஒரு காலத்தில் நைமித்தியப் பிரளயம் ஏற்பட்டு, உலகம் நீரில்

மூழ்கிவிட்டது. அது சமயம் வேதங்களையும், உயிருள்ள, உயிரற்ற பொருள்களையும் இறைவன் மீனாக அவதாரம் எடுத்து சத்தியவிரதன் என்னும் அரசனின் உதவியுடன் ஒரு கப்பலின் மூலம் அழிவிலிருந்து காப்பாற்றினான்.[5] இக்கதையிலிருந்து ஒரு காலத்தில் வேத இந்து சமயம் அழிந்து விட்டது, ஆனால் இறைவன் அதனை மீண்டும் தோற்றுவித்து வளர்த்தான் என்ற உண்மை வெளிப்படுகின்றது.[6] இக்கருத்தினை ஏற்கும் நிலையில் வராக புராணமும் திருநாராயணன் மச்ச அவதாரம் எடுத்து வேத இந்து மதத்தை அழிவிலிருந்து காத்தான் என்று கூறுகின்றது.[7]

இப்பின்னணியைத் திருமங்கையாழ்வார் கருத்தில் கொண்டு திருநாராயணன் மச்ச அவதாரம் எடுத்ததை,

"முந்நீரை முன்னாள் கடைந்தானை மூழ்த்தநாள்
அந்நீரை மீனாய் அமைத்த பெருமானை" [8]

என்றும்,

"வாதைவந் தடர, வானமும் நிலனும்
மலைகளும் அலைகடல் குளிப்ப
மீதுகொண் டுகளும் மீனுரு வாகி,
விரிபுனல் வரியகட் டொளித்தோன்" [9]

என்றும,

"அலைகடல் நீர்கு ழம்ப அகடாட ஓடி
அகல்வா னுரிஞ்ச முதுகில்
மலைகளை மீது கொண்டு வருமீனை மாலை
மறவா திறைஞ்சென் மனனே" [10]

என்றும் போற்றித் துதித்து அதன்வழி திருநாராயணனை வணங்குகின்றார்.

## *கூர்மம் அல்லது ஆமை அவதாரம்:*

யசூர் வேதமும் வாயு புராணமும் கூர்மம் என்பது இவ்வுலகின் நிலப்பகுதியைக் குறிக்கும் என்று கூறி, அதன் நான்கு கால்களும் உலகின் வடபகுதியில் அமைந்து நான்கு பெரிய மலைகளைச் சுட்டுகின்றன என்றும் குறிக்கின்றன.[11] சதபதப்பிராமணம் எனும் நூல் கூர்மம் தண்ணீரில் மிதப்பது போன்று, இவ்வுலகமும் மிதந்து கொண்டிருக்கின்றது என்று கூறும்.[12] மார்க்கண்டேய புராணம் கூர்மத்தை இந்தியாவின் நில அமைப்புடன் ஒன்றுபடுத்தி அசாம் மற்றும் அதனைச் சுற்றியுள்ள மாநிலங்கள் கூர்மத்தின் தலையைக் குறிக்கும் என்றும், வங்காளமும் கலிங்கமும் அதன் வயிற்றுப்

பகுதியைக் குறிக்கும் என்றும், இலங்கையும் அதனைச் சுற்றியுள்ள தீவுகளும் அதன் வலது காலைக்குறிக்கும் என்றும், இந்தியாவின் வடமேற்குப் பகுதி அதன் இடது காலைக் குறிக்கும் என்றும் செப்புகின்றது.[13]

ஒரு சமயம் தேவர்கள் நீண்ட வாழ்நாள் பெற்று வாழ்ந்திட விரும்பினார்கள். தேவர்கள் அவ்விருப்பத்தைத் திருநாராயணனிடம் எடுத்துரைத்தார்கள். திருநாராயணனும் திருப்பாற்கடலை மந்தரை மலையை மத்தாகவும் வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும் கொண்டு கடைவதால் கிடைக்கும் அமுதை அருந்தினால் நீண்ட வாழ்நாள் கிடைக்கும் என்றார். தேவர்களும் அவ்வண்ணமே செய்ய, மந்தரைமலை திருப்பாற்கடலில் மூழ்கியது. இதைக் கண்ணுற்ற திருநாராயணன் கூர்மமாய் அவதாரம் எடுத்து கடலின் அடியில் சென்று அம்மலையைத் தாங்கி திருப்பாற்கடலைக் கடைய உதவினான். அதனால் அமுதம் பெருகியது. அவ்வமுதத்தைத் திருநாராயணன் அனைத்து தேவர்களுக்கும் அருந்தக் கொடுத்தான். இவ்வகையில் கூர்ம அவதாரம் தேவர்கள் நீண்ட வாழ் நாள் பெற உதவியாய் இருந்தது. இக்கருத்தை இவ்வாழ்வார் தம் பாடல்களில் வைத்து,

"பொங்கு நீள்முடி யமரர்கள் தொழுதெழ
அமுதினைக் கொடுத்தளிப்பான்
அங்கொ ராமைய தாகிய வாதி!" [14]

என்றும்,

"மலங்கி விலங்கு நெடுவெள்ளம்
மறுக, அங்கோர் வரைநட்டு
இலங்கு சோதி யாரமுதம்
எய்து மளவோர் ஆமையாய்
விலங்கல் திரியத் தடங்கடலுள்
சுமந்து கிடந்த வித்தகனை" [15]

என்றும்,

"பருவரை யொன்று நின்று முதுகிற் பரந்து
சுழலக் கிடந்து துயிலும்
அருவரை யன்ன தன்மை அடலாமை யான
திருமால் நமக்கொ ரரணே" [16]

என்றும் கூர்ம அவதாரத்தைப் போற்றுகின்றார்.

## *வராகம் அல்லது பன்றி அவதாரம்:*

கிருத யுகத்தில் இரணியாட்சகன் இவ்வுலகைப் பாயைப் போல சுருட்டிக் கடலுக்கடியில் இராசாதலத்தில் வைத்து விட்டான். இதனால் உலகம் இருண்டு, வேத இந்து மதம் அழிந்து விட்டது. இது கண்டு தேவர்களும் முனிவர்களும்

திருநாராயணனை வணங்க, அவனும் வராகமாய் பிரம்மாவின் மூக்கிலிருந்து அவதாரம் எடுத்து கடலுக்கடியில் மூழ்கி இரணியாட்சகனுடன் போரிட்டு தன் சுதர்சனச் சக்கரத்தால் அவனது தலையை அறுத்து உலகை கடலிலிருந்து வெளிக்கொணர்ந்தான்.[17] விட்டுணு புராணமும் வாயு புராணமும் இவ்வதாரத்தைப் பற்றி குறிப்பிடும்பொழுது வராகம் என்பது வேதத்தையும், யாகங்களையும் குறிக்கும் என்கின்றன.[18] மேலும், இரவு, பகல், அறிவு, வேத வரிகள், சாமவேதப் பாடல்கள், யாகங்கள், யாகங்களில் தோன்றும் சிறுசிறு தெய்வங்கள் ஆகியன வராக அவதாரத்தின் உடலமைப்புகள் என்று விட்டுணு புராணம் காட்டி நிற்கின்றது.[19] இவ்விளக்கத்தையெல்லாம் ஒன்றுபடுத்தி, சுருங்கக் கூறின், வேத இந்து மதம் இந்தியாவில் அழிந்துபட்டபொழுது, மகாவிட்டுணு இவ்வவதாரம் எடுத்துத் தீயவர்களை அழித்து அம்மதத்தை மீண்டும் இந்தியாவிலும் அதன் துணைக் கண்டங்களிலும் பரவச் செய்தான் என்று கொள்ளலாம்.

திருமங்கையாழ்வார், புராணங்களில் வராகாவதாரம் பற்றிப் பேசப்பட்டுள்ள அனைத்துக் கருத்துக்களையும் வாங்கி அதனைப் பின்னரணியாக வைத்துத் தம் இலக்கியத்தில்,

"பன்றியா யன்று பாரகங் கீண்ட
பாழியான் ஆழியா னருளே" [20]

என்றும்,

"இருந்தண் மாநிலம் ஏனம தாய், வளை
மருப்பினில் அகத்தொடுக்கி
கருத்தண் மாகடல் கண்துயின் றவன்இடம்" [21]

என்றும்,

"மான வேல்ஒண்கண் மடவரல் மண்மகள்
அழுங்கமுந் நீர்ப்பரப்பில்
ஏன மாகியன் றிருநில மிடந்தவ
னே!எனக் கருள்புரியே" [22]

என்றும் கூறித் திருநாராயணனைத் துதி செய்து வணங்குகின்றார்.

## *நரசிம்ம அவதாரம்:*

கிருத யுகத்தில் இரணியன் வேத இந்து மதத்தை அழித்து அனைவரும் திருநாராயணனை ஒதுக்கித் தன்னையே துதிக்க வேண்டும் என்று கட்டளையிட்டுக் கொடுங்கோலாட்சி செய்து வந்தான். அதனால் அல்லலுற்ற வேதவிற்பன்னர்கள், யாகங்கள் செய்பவர்கள் ஆகியோர் திருநாராயணனை

வழிபட்டு உய்யும்வழி வேண்டினர். திருநாராயணனும் தன் பக்தனும் இரணியனது மகனுமான பக்த பிரகலாதனின் மூலம் கொடுங்கோலனை அழிக்கத் திருவுளம் கொண்டான். இரணியன் பக்தப் பிராகலாதனைத் தன்னையே வணங்க வேண்டும் என்று பலவழிகளில் துன்புறுத்தினான். மகனும் தந்தை கொடுத்த இன்னல்களைப் பொறுத்து திருநாராயணனையே முழுமுத்தற் பொருளாய் ஏற்று வழிபட்டான். இதனைக் கண்ணுற்ற இரணியன் மகனிடம் திருநாராயணன் உறைகின்ற இடத்தைக் கேட்க, மகனும் அவன் தூணிலுமுள்ன் துரும்பிலுமுளன் என்று விடையிறுத்தினன். இதனைக் கேட்ட இரணியன் வெகுண்டு, அருகிலுள்ள 'இத்தூணிலுமுளனோ?' என்று வினவி, தன் கையால் அதனைத் தாக்கினான். திருநாராயணனும் உடனே நரசிம்மமாக அத்தூணிலிருந்து வெளிப்பட்டு இரணியனுடன் போரிட்டு அவனைக் கொன்றான்.[23] பின்னர் இறைவன் பக்தப் பரிகலாதனை அந்நாட்டிற்கு மன்னனாக்கி வேத இந்து மதத்தைக் காத்தான்.[24]

இப்புராணச் செய்தியை இவ்வாழ்வார் மனதில் வாங்கியே இறைவனை முன்னிருத்திச் சமுதாயம் வாழின் அங்கு இன்பமே பெருகும் என்ற உண்மையின் அடிப்படையில் இவ்வதாரத்தை,

"மறங்கொ ளாளரி யுருவென வெருவர,
ஒருவன தகல்மார்வம்
திறந்து வானவர் மணிமுடி பணிதர
இருந்தநல் இமயத்துள்" [25].

என்றும்,

"பள்ளியில் ஓதி வந்ததன் சிறுவன்
வாயில்ஓர் ஆயிர நாமம்
ஒள்ளிய வாகிப் போதஆங் கதனுக்
கொன்றுமோர் பொறுப்பில னாகி
பிள்ளையைச் சீறி, வெகுண்டுதூண் புடைப்ப,
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கமாகிய தேவை" [26]

என்றும்,

"உளைந்த அரியும் மானிடமும்
உடனாய்த் தோன்ற ஒன்றுவித்து,
விளைந்த சீற்றம் விண்வெதும்ப
வேற்றோன் அகலம் வெஞ்சமத்து
பிளந்து வளைந்த உகிரானை" [27]

என்றும் துதித்து மகிழ்கின்றார்.

## *வாமனன் அல்லது திருவிக்கிரம அவதாரம்:*

வாமன அவதாரம் பற்றி இருக்கு வேதம் திருநாராயணன் மூன்று அடிகளைக் கொண்டிருக்கின்றான் என்றும், அவற்றில் இரண்டு அடிகளைப் பற்றியே உலகத்தோர் அறிவர் என்றும் கூறுகின்றது.[28] இவ்வவதாரம் பற்றிய செய்திகள் பாகவத புராணத்தில் விளக்கப்பட்டுள்ளன.[29] மகாபலி என்பவன் பக்த பிரகலாதனது மகனான வீரசேனனுக்குப் பிறந்தவன் ஆவான். இவன் தன் முயற்சியால் மூவுலகிற்கும் அரசனாகி, தனக்கு நிகராகவும் தன்னை எதிர்ப்பாரும் தன்னை அழிப்பாரும் இல்லாமல் பேரகங்காரம் கொண்டு வேத இந்து மதத்தை அழித்துக் கொடுங்கோலாட்சி செய்து வந்தான். இவனை அழிக்கவே திருநாராயணன் அதிதி என்பாளுக்கு மகனாக வாமன அவதாரம் எடுத்தார். இதனை அறிந்த மகாபலி ஒரு பெரும் யாகம் செய்து அதன்வழி தன்னுடைய வலிமையைப் பெருக்கி திருநாராயணனை வெற்றிகொள்ள எண்ணினான். மகாபலி அங்ஙனம் யாகம் செய்யும்பொழுது வேண்டுவோருக்கு வேண்டுவன வழங்க உறுதி பூண்டான். அப்பொழுது வாமனன் மகாபலி முன்சென்று மூன்றடி மண் தானம் கேட்க, மகாபலியும் ஒத்துக்கொண்டான். ஆனால் வாமனன் பேருருவாகி மூன்று உலகையும் தன் மூவடிகளால் அளந்து மகாபலியிடமிருந்து அவற்றைப் பெற்றான். அதன்பின் வாமனன் நிலவுலகை நேர்மையான வழியில் அரசு புரியும் மன்னர்களுக்கும், சொர்க்கத்தை இந்திரனுக்கும், மீதியுள்ள பாதாள உலகை மகாபலிக்கும் கொடுத்தான். இதனால் மகாபலி பாதாள உலகில் தங்கிவிட, அவனது கொடுங்கோன்மை நிலவுலகில் செயல்படவில்லை.[30] இவ்வாறாகப் பாகவத புராணம் கூறும் கதையினை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்பொழுது, மகாபலி வேத இந்து மதத்தை அழித்தமையால் இறைவன் வாமன அவதாரம் எடுத்து அவனை அழித்து அம்மதத்தை உலகில் மீண்டும் ஏற்படுத்தி மக்களைக் காத்தான் என்ற உண்மை பெறப்படுகின்றது. இக்கதையினையும் அதன் பின்னணியாக உள்ள உண்மையையும் மனதில் கொண்டு இவ்வாழ்வார் வாமன அவதாரத்தின் சிறப்பினையும் அதன் மேன்மையையும்,

". . . . . தூய வரியுருவிற்
குறளாய்ச் சென்று, மாவலியை
ஏயா னிரப்ப `மூவடிமண்
இன்றே தா' என் றுலகேழும்
தாயான் காயா மலர்வண்ணன்" [31]

என்றும,

"ஒருகுறளாய் இருநிலம்மூ வடிமண் வேண்டி
உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர்" [32]

என்றும்,

"... மூவடி நானிலம் வேண்டி
முப்புரி நூலொடு மானுரி யிலங்கும்
மார்வினில் இருபிறப் பொருமா ணாகி
ஒருமுறை யீரடி மூவுல களந்தனை" [33]

என்றும் பாடி இறையின்பத்தால் இன்புறுகின்றார்.

### *பரசுராம அவதாரம்*

கீர்த்திவீர்த்தனன் என்னும் அரசன் இந்தியாவை நீதிநெறி தவறாது ஆட்சி செய்து வந்தமையால் பிராமணர்கள் வேதங்களைக் கற்று வேள்விகள் செய்து துன்பம் இல்லாமல் இன்பமாய் வாழ்ந்து வந்தார்கள். அவன் மிகப்பெரிய யாகம் ஒன்று செய்து பிராமணர்களுக்குப் பொன்னும், பொருளும் கொடுத்து மரியாதை செய்தான். அது சமயம் அவன் பிருகு குல பிராமணர்கள் கல்வி, கேள்வி, யாகங்கள் இயற்றுவதில் துறை போனவர்களாக இருந்தமையால் அவர்களுக்கும், அவர்களது சந்ததியர்களுக்கும் மரியாதை செய்வித்துப் பாராட்டுவதற்குத் தவறவில்லை. ஆனால் கீர்த்திவீர்த்தனனுக்குப் பிறகு அவன் மகன் கார்தவீரிய அருச்சுனன் என்பான் அரசப் பொறுப்பை ஏற்றவுடன் நாட்டின் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. அருச்சுனன் தன் ஆட்சி காலத்தில் வேத இந்து மதத்தை அழித்தான். வேத விற்பன்னர்களைத் துன்புறுத்தினான். யாகங்கள் செய்வதைத் தடுத்தான். அது சமயம் பிருகு குலத்தில் சமதக்னி என்னும் முனிவருக்குப் பரசுராமன் திருநாராயணனது அவதாரமாகத் தோன்றினான். பரசுராமனிடம் அருச்சுனனால் துன்பமுற்ற பிராமணர்கள் உதவி கோரினர். பரசுராமன் அவர்களது வேண்டுதலுக்குச் செவி சாய்த்து அருச்சுனனுடன் இருபத்தோரு முறை போரிட்டு முடிவில் அவனைக் கொன்றான். அதன்பிறகு இந்தியாவிலும் அதனைச் சார்ந்த உபகண்டங்களிலும் புதிய ஆட்சி ஏற்பட்டு வேத இந்து மதம் மீண்டும் தழைத்து, பிராமணர்கள் இன்பமாய் வாழ்ந்து வரலாயினர்.[34] இப்புராணக் கதையினை மனதில் கொண்டு திருநாராயணனைப் போற்றித் துதிக்கும் வகையிலும் சமுதாயத்தில் தீயவற்றை அழித்து நல்லவை நடந்திட ஒவ்வொருவரும் முயன்றிடல் வேண்டும் என்பதை உணர்த்திடும் வகையிலும் திருமங்கையாழ்வார் பரசுராம அவதாரத்தை,

"கோமங்க வங்கக் கடல்வைய முய்யக்
குலமன்னர் அங்கம் மழுவில் துணிய
தாமங் கமருள் படைதொட்ட வென்றித்
தவமா முனியைத் தமக்காக்க கிற்பீர்! [35]

என்றும்,

"முனியாய் வந்து மூவெழுகால்
முடிசேர் மன்னர் உடல்துணிய
தனிவாய் மழுவின் படையாண்ட
தாரார் தோளான்" [36]

என்றும்,

"வற்புடைய வரைநெடுந்தோள் மன்னர் மாள,
மடிவாய மழுவேந்தி, உலக மாண்டு" [37]

என்றும் போற்றி திருநாராயணனைப் புகழ்ந்து வணங்குகின்றார்.

## தசரதராம அவதாரம்

திரேதா யுகத்தின் முடிவில் இராவணன் தன் ஆட்சியில் வேத இந்து மத்தை அழித்து வேதவிற்பன்னர்களைக் கொடுமை செய்தான். இதனால் பிரம்மா, யாகங்களின் முன் நிற்கும் சிறு தெய்வங்கள், யாகம் இயற்றுவோர் ஆகியவர்கள் திருநாராயணனிடம் முறையிட்டனர். திருநாராயணனும் அயோத்தியை அரசாட்சி செய்து வரும் தசரத மன்னனக்கு மகனாக இராமவதாரம் எடுத்து இராவணனை அழிப்பதாக அவர்களுக்கு உறுதி கூறினான். இராமன் தசரத மன்னனுக்கு மகனாகப் பிறந்து இளமையில் கற்பன கற்றுத் திறமை மிக்கவனாக விளங்கினான். இராமன் தன் இளம் வயதிலேயே விசுவாமித்திர முனிவர் செய்த யாகத்தைக் காத்தான். அவன் மிதிலையில் சனகனுடைய வில்லை முறித்து வெற்றி பெற்று அம் மன்னனின் மகளான சீதையை மணந்தான். தசரத மன்னன் உரிய காலத்தில் இராமனுக்கு அரசுரிமை வழங்க முற்பட, தசரதன் மனைவி கைகேயி மற்றும் அவள் தோழி மந்தரை ஆகியவர்களின் சூழ்ச்சியால் அம்முயற்சி நிறைவேறாமல் போக, இராமன் தன் தந்தையின் வாக்கின்படி பதினான்கு ஆண்டுகள் கானகத்தில் இருக்கச் சென்றான். இராமன் காட்டில் இருக்கும்பொழுது தமது தங்கை சூர்ப்பனகை இலக்குவணனால் அவமதிக்கப்பட்டதாலும், சீதையின் அழகில் தான் மயங்கியதாலும், இராவணன் சீதையைத் தன் நாட்டிற்குத் தூக்கிச் சென்று விட்டான். கானகத்தில் இராமனுக்குச் சுக்ரீவன், அனுமன், அங்கதன் ஆகியோர்களது நட்புக் கிடைத்தது. இராமன் அனுமனை தூதாக அனுப்பி அவனால் இராவணன் சீதையை இலங்கையில் சிறை வைத்திருப்பதை உணர்ந்து தென்கடலில் அணை கட்டி இலங்கைச் சென்று இராவணனை அழித்துச் சீதையை மீட்டான். பின்னர் இராமன் அயோத்திக்கு மன்னனாகி வேத இந்து மதத்தைக் காத்து எவ்விதக் குறைகளுமின்றி அரசாண்டு வந்தான்.[38] திருநாராயணன் இராமாவதாரம் எடுத்தமையால் உலக மக்களுக்குப் பல நற்கருத்துகள் தெளிவாயின. அவற்றைக் கீழ்வருமாறு வரிசைப்படுத்தலாம்:

1. ஒருவன் எதனையும் தியாகம் செய்யும் மனப்பக்குவத்தைப் பெற்றிருத்தல் வேண்டும்.

2. ஒருவன் ஒரே மனைவியுடன் வாழ்ந்து வாழ்க்கையில் ஏற்படும் அனைத்துவிதமான சிக்கல்களையும் வெற்றி கொண்டு வாழ்க்கையை அமைதியாகவும் இன்பமாகவும் நடத்திச் செல்ல வேண்டும்.

3. ஒருவன் உண்மையையும், பிற உயிர்களைக் கொல்லாமையையும் தன் இரு கண்ணெனப் பேணுதல் வேண்டும்.

4. இந்து சமயம் காட்டும் வர்ணாசிரமத் தருமத்தின்படி ஒருவன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

திருமங்கையாழ்வார் இராமாவதாரச் செய்திகளையும் அதன்வழி மக்களுக்கு இறையுணர்வையும் நேர்மையான வாழ்க்கையின் மேன்மையையும் காட்டி மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் வீட்டு நிலை அடையத் தேவையான அனைத்து நற்கருத்துக்களையும் சொல்லி, அதன்வழி திருநாராயணனை,

"தைய லாள்மேல் காதல்செய்த தானவன் வாளரக்கன்
பொய்யிலாத பொன்முடிகள் ஒன்பதோ டொன்றும் அன்று
செய்த வெம்போர் தன்னில் அங்கோர் செஞ்சரத் தால்உருளை
எந்தை எந்தை எம்பெருமான்" [39]

என்றும்,

"முன்பொலா இராவ ணன்தன்
முதுமதி ளிலங்கை வேவித்து
அன்பினா லனுமன் வந்தாங்
கடியிணை பணிய நின்றார்க்கு"

என்றும்,

"அன்ன கடலை மலையிட் டணைகட்டி
மன்னன் இராவணனை மாமண்டு வெஞ்சமத்து
பொன்முடிகள் பத்தும் புரளச் சரந்துரந்து
தென்உலகம் ஏற்றுவித்த சேவகனை" [41]

என்றும் எடுத்தியம்பி இராமாவதாரத்தைப் போற்றிப் புகழ்கின்றார்.

## *பலராமவாதாரமும், கிருட்டிணாவதாரமும்*

திருநாராயணனது எட்டாவது அவதாரம் பலராமாவதாரம். ஒன்பதாவது அவதாரம் கிருட்டிணாவதாரம். பலராமன் கிருட்டிணனது மூத்த சகோதரன். புராணங்களில் பலராமனுடைய அவதாரப் பெருமைகள் பேசப்பட்டாலும் அவை

கிருட்டிணாவதாரத்துடன் இணைத்தே கூறப்பெற்றுள்ளன. பலராமாவதாரத்தின் புகழைத் தனித்துப் பேசாமைக்குப் பின்வரும் காரணத்தையும் முன்வைக்கலாம். ஒரு காலத்தில் பலராம அவதாரத்தின் பெருமை மட்டும் பேசப்பெற்றது. ஆனால் அதற்கு அடுத்த கால கட்டத்தில் அப்பெருமைகளைக் கிருட்டிண அவதாரத்துடன் இணைத்துப் போற்றி வணங்கினார்கள்[42] திருமங்கையாழ்வாருடைய பனுவல்களை நோக்கும்பொழுது அவர் பலராம அவதாரத்தைத் தனித்துக் குறிப்பிடவில்லை எனலாம். ஆனால் அவர் கிருட்டிண அவதாரத்தின் பெருமைகளைப் பற்றிப் பேசுமிடத்து அதன் உள்ளீடாக அவனது சகோதரனையும் போற்றிப் பரவினார் என்று கூறலாம். மேலும் கிருட்டிணாவதாரத்தைச் சுட்டும் பொழுது, பாகவத புராணமும், விட்டுணு புராணமும் பலராம அவதாரத்தையும் சேர்த்தே சுட்டுகின்றன என்பது ஈண்டுச் சிந்திக்கத்தக்கதாகும்.

வாசுதேவருக்கு மனைவியர் இருவர். மூத்த மனைவி உரோகிணியின் மைந்தன் பலராமன். இளைய மனைவி தேவகியின் மைந்தன் கிருட்டிணன் இவர்கள் பிறப்பதற்கு முன்னர் மதுராவை இவர்களது மாமனான கம்சன் கொடுங்கோலாட்சி செய்து வந்தான். அவன் ஆட்சியில் அதர்மம் தலை விரித்தாடியது, யாகங்கள் செய்வது நிறுத்தப்பட்டது, வேத மந்திரங்கள் அழியலாயின, வேத இந்து மதம் பாழ்பட்டது. பலராமனாலும், கிருட்டிணனாலும் தனக்கு அழிவு ஏற்படும் என்பதை முன்னமேயே அறிந்த கம்சன் இவர்களைக் கொல்ல முயற்சிக்க வாசுதேவனின் நண்பனான நந்தனின் உதவியால் இவர்கள் மதுராவின் அருகிலுள்ள விருந்தாவனத்தில் தங்கள் இளமைப் பருவத்தைக் கழித்தார்கள். பின்னர் இவ்விருவரும் மதுராவிற்குத் திரும்பி கம்சனைக் கொன்று மதுராவை உக்கிரசேனனை முன்வைத்து ஆண்டு வந்தார்கள் இவ்விருவரும் தங்கள் ஆட்சியை நான்கு திசைகளிலும் பரப்பினர். இவர்கள் வேத விற்பன்னர்களையும், யாகங்கள் செய்பவர்களையும் காத்து வேத இந்து சமயத்தை வளர்த்தார்கள். தங்கள் வாழ்நாளில் மகத நாட்டை ஆண்ட சராசந்த மன்னனை வென்று மகதத்தை மதுராவுடன் இணைத்தார்கள். மேலும் இவர்கள் தங்கள் எதிரிகளான சிசுபாலனையும், தந்தவக்தனையையும் அழித்தனர்.

திருமங்கையாழ்வார் கிருட்டிண அவதாரத்தை,

"பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடுஉயிரை
*வற்ற வாங்கி யுண்ட வாயான் வதரி வணங்குதுமே"* [43]

என்றும்,

**"உரங்க ளால்இயன் றமன்னர் மாளப்**
**பார தத்தொரு தேர் ஐவர்க் காய்ச்சென்று**
**இரங்கி யூர்ந்தவர்க் கின்னருள் செய்யும்**
**எம்பிரானை"** [44]

என்றும்,

"தந்தை காலில்விலங் கற, வந்து தோன்றிய
தோன்றல்" [45]

என்றும்,

"கூந்த லார்மகிழ் கோவல னாய் வெண்ணெய்
மாந்த முந்தையில் கண்டு மகிழ்ந்துபோய்
பாந்துட் பாழியில் பள்ளி விரும்பிய
வேந்தனை" [46]

என்றும் போற்றிப் புகழ்ந்து, மனிதன் என்றும் நல்லவற்றைக் காத்துக் தீயவற்றை அழிக்க வேண்டும் என்றும், மனிதன் அறத்தின் வழி வாழ வேண்டும் என்றும், கூறுகின்றார். அத்துடன் உலகில் மனிதராய்ப் பிறந்த அனைவரும் திருநாராயணனை வணங்கித் தங்கள் பிறவிப் பெருங்கடலைக் கடந்திடல் வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றார்.

இதுவரையில் ஆராயப்பட்ட திருநாராயணனின் அனைத்து அவதாரங்களையும் நோக்கும்பொழுது, திருநாராயணன் பொதுவாக வேத இந்து சமயத்தைச் சார்ந்தவர்களுக்காக இவ்வதாரங்களை அவ்வக் காலங்களில் எடுத்துள்ளான் என்ற கருத்து நிரூபிக்கப்படுகிறது. அவ்வக்காலங்களில் நைமித்தியப் பிரளயங்கள் ஏற்பட்டு வேதங்கள் மறையும் காலத்தும், வேத இந்து சமயத்தை வெறுப்பவர்கள் சமுதாயத்தில் உயர்ந்து தம் சமயத்தைச் சாராதவர்களை அழிக்க முற்பட்டக் காலத்தும், இறைவன் அவதாரங்கள் எடுத்து அவ்வழியிலிருந்து அச்சமயத்தையும் அச்சமயத்தைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றியுள்ளமை தேற்றமாகின்றன.

திருநாராயணனின் தசரதராம அவதாரத்தை நோக்குமிடத்து சிறப்பான கருத்து ஒன்று தெளிவாகின்றது. இராமபிரான் இளம் வயதிலேயே அயோத்தியின் அரசனாக முடிசூடாது பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசிக்க வேண்டும் என்ற பெற்றோர்களின் கட்டளையை இன்முகத்துடன் மனமுவந்து ஏற்று கானகம் ஏகினான்; தன்னிடம் மிக்கு இருக்கும். அன்பினால் அகலிகையின் சாபத்தைத் தீர்த்து வைத்தான்; அதர்மத்தின் ஒட்டுமொத்த இருப்பிடமாக இருந்த இராவணனை அழித்தான்; சீதையை இராவணாதிகளிடமிருந்து மீட்டுத் தன்னாடு திரும்பி நேர்மையான முறையில் ஆட்சி செய்தான். இராமனுடைய இவ்வாழ்க்கையை ஆராயுமிடத்து மனிதன் இன்பம்-துன்பம், வெற்றி-தோல்வி என்னும் இருவேறுபட்ட மனித உணர்வுகளை இனம் கண்டு சரிசமமாகப் பாவித்து வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை எதிர்கொண்டு, ஒழுக்கத்தையும், உண்மையையும் தன் உயிரெனக் கருதி, அவற்றை வெற்றி கொள்ள வேண்டும் என்ற பேருண்மை நிரூபணமாகின்றது.

மேலும் இறைவனின் தசரதராம மற்றும் கிருட்டிண அவதாரங்களை நுணுகிப் பார்க்கும்பொழுது திருநாராயணனின் முழுமையான பேரன்பே இவ்வவதாரங்களாக வெளிப்பட்டமை அறியப்பெறுகின்றது. சுருங்கக் கூறின், இறைவன் உலக உயிர்களின் மீது கொண்டுள்ள வற்றாத அன்பின் வெளிப்பாடாக அவன் தன்னிலையிலிருந்து கீழிறங்கி அவதாரங்கள் எடுத்து மக்களுடைய வாழ்க்கையை மேன்மையடையச் செய்து, அவர்கள் இப்படித்தான் வாழ வேண்டும் என்று உலகில் வாழ்ந்து காட்டிச் சமுதாயம் முழுமையும் இன்பமாகவும் அமைதியாகவும் இருக்க வழி காட்டுகின்றான். இக்கருத்தை திருமங்கையாழ்வார் காட்டும் திருநாராயணனுடைய அவதாரங்களின் அடிப்படை உண்மையென்று முடிவுறுத்தலாம்

இவர் திருநாராயணனது அவதாரப் பெருமைகளைப் போற்றிப் புகழ்ந்து களி கூர்ந்து அதன் வழி மனித வாழ்க்கையின் உண்மைகளை எடுத்துக் கூறித் தனி மனித மற்றும் சமுதாயச் சிக்கல்களை போக்கிட பலவழிகளைக் கூறியுள்ளார். இவ்வாழ்வார் இறைவனின் படைப்பான உலக உயிர்களிடத்து அன்பு செலுத்தினால் அவ்வன்பு அவன் மனதின் உள்ளீடாக இருக்கும் இறையுணர்வைத் தூண்டும், அதனால் சமுதாயத்தினர் அனைவரும் இன்பமாய் வாழ்வதற்கும், பிறவாப் பேரின்பம் பெறுவதற்கும் வழிவகைகள் செய்யும் என்கின்றார். இவ்வகையில் இவ்வாழ்வார் சுட்டும் திருநாராயணனது அவதார நோக்கத்தை அறிந்து கொண்டால் மக்கள் கீழ்காணும் வகைகளில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்வர்:

1. மனிதன் இறைவன், உயிர், உலகம் ஆகியவற்றின் உண்மைகளைக் கூறும் வேதங்கள், உபநிடதங்கள், புராணங்கள், பக்தி இலக்கியங்கள், அற நூல்கள் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்து, அவற்றைக் காத்து, அவை கூறும் உண்மைகளைக் கற்று, அவற்றின்வழித் தன் வாழ்க்கையை இறைவன்பால் பட்டதாயும், அறத்தின்பால் பட்டதாயும் அமைத்துக்கொள்வான்.

2. இறைவன் என்றும் நம்மிடையே இருக்கின்றான் என்ற உண்மையை மக்கள் உணருவார்கள். அதனால் அவர்கள் தங்கள் எண்ணத்தில், வாக்கில், செய்யும் செயலின் உள்ளீடாக அவன் இருந்து கொண்டு உதவி செய்கின்றான் என்ற எண்ணம் கொள்வர். அதனால் அவர்கள் நம்பிக்கையையும் மனவலிமையையும் கொண்டு இன்பத்தால் ஏற்றமும், துன்பத்தால் இறக்கமும் கொள்ளாமல், மனதில் சமநிலை வரப்பெற்று, வாழ்க்கையில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளால் எவ்வித மனமாற்றமும் கொள்ளாமல், தங்கள் வாழ்க்கையை அமைதியாகவும் இன்பமாகவும் நடத்திச் செல்வர்.

3 இறைவன் எல்லோருக்கும் வேறுபாடு கருதாமல் அனைத்து நலன்களையும்

அருளுகின்றான் என்பதையும் தீயவர்களையும் திருத்தி முடிவில் தன்பால் இழுத்துக் கொள்கின்றான் என்பதையும் ஒவ்வொருவரும் உணர்ந்து நேர்மையான வாழ்க்கை வாழ்வார்கள்.

4. இறைவனை முன்வைத்து வாழ்க்கை நடைபெறின் மக்களுக்குத் தோல்வியைக் கண்டு துவளாத போக்கும் தீயவற்றைக் கண்டு அழிக்க வேண்டும் என்ற மன உறுதியும் ஏற்படும்.

5. மனிதன் அகங்கார வேட்கை கொள்ளாது உலகப் பற்றினை சிறிது சிறிதாக விடுத்து மன அமைதியுடனும் இன்பமாயும் வாழுவான்.

6. இறைவன் அவதாரங்கள் எடுத்து தீயவற்றை அழிக்கின்றான் என்ற நிலையில், மக்கள் அனைவரும் தீயவற்றை அகற்றி முடிவில் சமதர்மச் சமுதாயத்தைச் சமைப்பர்.

7. இறைவன் முன் உயிருள்ள, உயிரற்ற பொருள்கள் அனைத்தும் சமம்; மனிதர்களில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற வேறுபாடு இல்லை; உலக சமுதாயங்கள் அனைத்தும் ஒன்றே; உலக மக்கள் எல்லோரும் ஒற்றுமையுடன் அனைத்து நலன்களையும் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்து இறை நிலை அடைய வேண்டும்.

பொன்னெழுத்துகளால் பொறிக்க வேண்டிய இவ்வரிய கருத்துக்களை உலகத்தோர் அனைவரும் அறிந்து அதற்கு இசைய வாழ்ந்து சுபிட்சமடைய வேண்டும் என்று இறைவன் அவதாரங்கள் எடுத்து உலகைத் தன் பெருங்கருணையால் இரட்சிக்கின்றான்.

# திருமங்கையாழ்வாரும் பூசைத்திருமேனியும்

இன்பத்திலேயே எக்காலத்தும் இருக்கின்ற நித்திய முக்தர்கள் புடைசூழ திருப்பாற்கடலிலே திருமகளுடன் ஆதிசேசன் மீது ஆனந்த உறக்கத்தில் இருக்கும் திருநாராயணன், தான் உகந்தருளின புண்ணிய நகரங்களில் உள்ள திருக்கோயில்களில் பக்தர்கள் தன்னை வணங்கிப் பரமபதம் அடைய, அர்ச்சை அல்லது பூசைத்திருமேனியாக வடிவம் கொண்டு, வாழ்க்கையின் கடைநிலையில் உடையோனையும் ஈடேற்ற வைக்கக் காரணமாகின்றான்.

திருமங்கையாழ்வார் தம் வாழ்நாளில் தருமாலடியவர்களை ஆராதனை செய்வதற்காகவே தம் அனைத்துச் செல்வங்களையும் செலவழித்தார். இதனால் பொருள் தீர்ந்த நிலையில் வழிப்பறி செய்து தாம் மேற்கொண்ட இறைபணியைத் தொடர்ந்து செய்தார். ஒரு சமயம் இவர் திருமணங்கொல்லையில் ஓர் ஆலமரத்தின் அடியில் மறைந்திருந்து வழிப்பறி செய்யும் பொழுது திருமாலே திருமகளுடன் நேரில் வந்து, 'ஓம் நமோநாராயணாய' எனும் திருவெட்டெழுத்து மந்திரத்தை ஓதி அருள் பாலித்தார் அதுமுதல் இறையின்பம் இவரது உள்ளத்தில் பொங்கியது. அதுசமயம் திருமாலே இவரை நோக்கி, "எங்கள் அன்பிற்கு உறைவிடமான செல்வனே உன்னுடைய சீரிய கூரிய தீஞ்சொல் தமிழ்ப் பாட்டுக்களைக் கேட்பதில் எங்களுக்கு வேட்கை மிக்கது. உன் இன்பத் தமிழ்ப் பாட்டுக்களை நானும் உன் அன்னையாகிய திருமாமகளும் கேட்டு மகிழ்வெய்தவும், உலகத்து மக்கள் அத்தனைக் கற்று உய்யவும் நாங்கள் பூவுலகில் கோவில்களில் பூசைத் திருமேனியாக இருக்கும் புனித நகரங்களுக்குச் சென்று வணங்கி இன்தமிழ்ப் பனுவல்கள் பாடுவாயாக"[1] என்று கூறி மறைந்தனர். அதுமுதல் இவ்வாழ்வாரும் இந்தியாவிலுள்ள புனித நகரங்களில் பூசைத் திருமேனியாகக் கோயில் கொண்டிருக்கும் திருமகள்நாதனைத் தம் பாடல்களால் பாடி மனம் குளிர வைத்து அவற்றின்வழித் தாமும் இன்புற்று இறைவாழ்க்கை வாழத் தொடங்கினார்.

இவ்வாழ்வாருடைய பெரிய திருமொழிக்கு உரைகண்ட பெரியவாச்சான் பிள்ளை இவர் பூசைத்திருமேனியை வணங்கி இன்புறத் திருநாராயணன் கைக்கொண்ட முறையினைத் தம் உரையில், "இவ்வாழ்வார் கண்ணால் காணும்

பொருள்களைத் தவிரப் பிற பொருள்களை அறியாதவராய் இருக்கின்றார். இவரது நிலை இதுவானால், 'நம்மையும் அப்பொருள்களே போல இவர் கண்ணுக்கு இலக்கு ஆக்குவோம்; அப்போது இவரால் விரும்பாமல் ஒழிய ஒண்ணாது அன்றோ!' என்று இறைவன் கருதினான். இம்மண்ணுலகில் உகந்தருளின நிலங்களிலே வந்து தங்கினான்; இவரைக் கடைக்கணித்துத் தன் படிகளை அடையக் காட்டிக் கொடுத்தான். இவருக்குத் தன்னை இந்நிலவுலகில் இருக்கும்போதே திருநாட்டிலுள்ளார் படி இவருக்கு ஆகும்படி பண்ணினான்; அந்நாட்டினைச் சேர்தலையும் இவருக்குச் செய்து கொடுத்தான். இவையே இவர்தம் நூல்கள் எல்லாவற்றின் உள்ளீடும் ஆகும்"[2] என்று கூறுகின்றார். இவ்வரிகளை ஆராயும்பொழுது, பெரியவாச்சான்பிள்ளை இவ்வாறு கூறியிருந்தபோதிலும் அதனால் நாம் அறிவது பக்தர்கள் அனைவரும் எளிமையான பக்தியின் வழி இறைநிலை அடையவே திருநாராயணன் திருக்கோயில்களில் வாத்சல்ய குணத்துடன் பூசைத்திருமேனியாய் வெளிப்படுகின்றான் என்பதே.

இவ்வாழ்வார் திருநாராயணனிடம் பக்தி செய்து அதன்வழித் தம் இதயத்தை அவன் இருக்கும் இடமாக ஆக்குகின்றார். இவர் தம் பனுவல்களின்வழித் தமது சிறுமைகளையும், திருநாராயணனது பெருமைகளையும், அவன் எளி வந்து தம்மை அவன்பால் ஈர்த்துக் கொண்டத் திறத்தையும் எண்ணி நெஞ்சம் நெகிழ்கின்றார். இவர் திருமகள்நாதனை வணங்கும்பொழுது அவன் குடிகொண்டுள்ள இறையருள் நகரங்களில் இயற்கையாய் வளர்ந்து செழித்திருக்கும் மலர்களின் அழகைப் புகழ்ந்தும், அவற்றின் நறுமணங்களைப் போற்றியும், அங்கு இருக்கும் பறவைகளை வர்ணித்தும், கடலின் இயற்கையழகைச் சொல்லியும், இறைவன் எவ்வாறெல்லாம் அழகானவனாயும், பக்தர்களை இரட்சிக்கின்றவனாயும் இருக்கின்றான் என்பதைத் தெளிவுபடுத்துகின்றார். அது சமயம் திருநாராயணனின் அழகையும் அவனது கருணையையும் எண்ணி, அவன் துளசி மலர்களால் அலங்கரிக்கப்பட்டுப் போற்றப்படுபவன் என்றும், அவன் கருடப் பறவையின்மீது அமர்ந்து உலகை வலம் வருபவன் என்றும் குறிக்கின்றார். இவ்வாழ்வார் திருநாராயணனைத் திருமால், மாயோன், கண்ணன், திருமகள்நாதன், அரங்கன், கோவிந்தன் என்று வேறு வேறு காரணப் பெயர்களால் விளிக்கின்றார். அங்ஙனம் விளிக்கும் காரணப் பெயர்கள் உயர்வான தத்துவத்தை வெளிப்படுத்துவனவாகவோ அவனது பூசைத் திருமேனியின் அழகை ஆராதிப்பனவாகவோ அமைந்துள்ளன. இவ்வாழ்வார் பூசைத்திருமேனியை உலகத்தொடர்புடன் பல பெயர்களால் விளித்து அவற்றின்வழி இவ்வுலகைக் கடந்து இறையுலக எண்ணங்களைத் தம்முள் இருத்திக் கொள்கின்றார். இவர் இவ்வழியில் இறைவனை வணங்கும்பொழுது தம் மனம் பக்குவப்படாத நிலையில் இன்ப உணர்வு மேலோங்க அதன்வழித் தான் அடைந்த மனத்தாங்கல்களைப் பனுவல்களின் மூலம் இறைவனிடம் எடுத்துக் கூறி,

அவனைத் தம் மனதில் குடிகொள்ள வைத்துப் பரமபத இன்பத்தை அனுபவிக்கின்றார்.

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியை ஆராயும் பொழுது அவற்றால் அவர் பூசைத்திருமேனிகளை வணங்குவதாக அமைந்த பாடல்களே அதிகம் உள்ளமை தெரிகின்றது. பெரிய திருமொழியின் *1084* பாடல்களில் முதல் *900* பாடல்கள் இவர் *52* புனித இறையருள் நகரங்களுக்குச் சென்று ஆங்குப் பூசைத்திருமேனியாகக் குடிகொண்டிருக்கும் திருநாராயணனைப் பாடி வணங்கும் முறையில் அமைந்துள்ளன. அவற்றைக் கீழ்க்காணுமாறு அட்டவணைப் படுத்தலாம்.

| வ.எண். | ஊர் | பாடப்பெற்றத் திரு மொழிகளின் எண்ணிக்கை | திருமொழியின் முதற்குறிப்பு |
|---|---|---|---|
| *1.* | திருப்பிருதி | ஒரு திருமொழி - *1.2* | 'வாலி மாவலத் தொருவன்' |
| *2.* | திருவதரி | ஒரு திருமொழி - *1.3* | 'முற்ற முத்துக்கோல்' |
| *3.* | திருவதரியாச் சிராமம் | ஒரு திருமொழி - *1.4* | 'ஏனம்முன் ஆதி' |
| *4.* | திருச்சாளக்கிராமம் | ஒரு திருமொழி - *1.5* | 'கலையும் கரியும்' |
| *5.* | நைமிசாரணியம் | ஒரு திருமொழி - *1.6* | 'வாணிலா முறுவல்' |
| *6.* | சிங்கவேள்குன்றம் | ஒரு திருமொழி - *1.7* | 'அங்கண் ஞாலம்' |
| *7.* | திருவேங்கடம் | நான்கு திருமொழிகள் *1.8* முதல் *2.1* முடிய | *1* 'கொங்கலர்ந்த'<br>*2.* 'தாயே தந்தையென்றும்'<br>*3.* 'கண்ணார் கடல் சூழங்கை'<br>*4.* 'வானவர் தங்கள்' |
| *8.* | திருஎவ்வுளூர் | ஒரு திருமொழி - *2.2* | 'காசையாடை' |
| *9.* | திருவல்லிக்கேணி | ஒரு திருமொழி - *2.3* | 'விற்பெரு விழவும்' |
| *10.* | திருநீர்மலை | ஒரு திருமொழி - *2.4* | 'அன்றாயர் குலக்கொடி' |
| *11.* | திருக்கடல்மல்லை | இரண்டு திருமொழிகள் *2.5, 2.6* | *1.* 'பாராய துண்டுமிழ்ந்த'<br>*2.* 'நண்ணாத வாளவுண' |
| *12.* | திருவிடவெந்தை | ஒரு திருமொழி *-2.7* | 'திவளும் வெண்மதிபோல்' |
| *13.* | திருவட்டபுயகரம் | ஒரு திருமொழி *-2.8* | 'திரிபுரம் மூன்றெரித்த' |
| *14.* | பரமேச்சுர விண்ணகரம் | ஒரு திருமொழி *-2.9* | 'சொல்லுவன் சொல் பொருள்' |
| *15.* | திருக்கோவலூர் | ஒரு திருமொழி *-2.10* | 'மஞ்சாடு வரையேழும்' |
| *16.* | திருவயிந்திரபுரம் | ஒரு திருமொழி *-3.1* | 'இருந்தண் மாநிலம்' |
| *17.* | தில்லைத் திருச்சித் திரகூடம் | இரண்டு திருமொழிகள் *3.2, 3.3* | *1.* 'ஊண்வாட உண்ணா<br>*2.* 'வாட மருதிடை |

| | | |
|---|---|---|
| 18. காழிச்சீராம விண்ணகரம் | ஒரு திருமொழி -3.4 | 'ஒரு குறளாய் இருநிலம்' |
| 19. திருவாலி | மூன்று திருமொழிகள் 3.5. முதல் 3.7 வரை | 1. 'வந்துண தடியேன்'<br>2. 'தூவிரிய மலருழக்கி'<br>3. 'கள்வன்கொல்? யான் அறியேன்' |
| 20. திருநாங்கூர் மணி மாடக்கோயில் | ஒரு திருமொழி -3.8 | 'நந்தா விளக்கே' |
| 21. திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் | ஒரு திருமொழி -3.9 | 'சரங்கொண்ட இரணியன் |
| 22. திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் | ஒரு திருமொழி -3.10 | 'திருமடந்தை மண்மடந்தை' |
| 23. திருத்தேவனார் தொகை | ஒரு திருமொழி 4.1 | 'போதலர்ந்த பொழில் சோலைப்' |
| 24. திருவன் புருடோத்தமம் | ஒரு திருமொழி 4.2 | 'கம்ப மாகடல்' |
| 25. திருநாங்கூர்ச் செம்பொன் செய்கோயில் | ஒரு திருமொழி -4.3 | 'பேரணிந் துலகத்தவர்' |
| 26. திருநாங்கூர்த் திருத்தெற்றியம் பலம் | ஒரு தி௫மொழி -4.4 | 'மாற்றரசர் மணிமுடியும்' |
| 27. திருநாங்கூர்த் திருமணிக்கூடம் | ஒரு திருமொழி -4.5 | 'தூம்புடைப் பனைக்கை' |
| 28. திருநாங்கூர்க் காவளம்பாடி | ஒரு திருமொழி - 4.6 | 'தா அளந் துலக முற்றும்' |
| 29. திருநாங்கூர்த் திருவெள்ளக்குளம் | ஒரு திருமொழி -4.7 | 'கண்ணார் கடல்போல்' |
| 30. திருநாங்கூர்ப் பார்த்தன்பள்ளி | ஒரு திருமொழி -4.8 | 'கவளயானைக் கொம்பொசித்த' |
| 31. திருவிந்தளூர் | ஒரு திருமொழி -4.9 | 'நும்மைத் தொழுதோம்' |
| 32. திருவெள்ளியங்குடி | ஒரு திருமொழி -4.10 | 'ஆய்சியர் அழைப்ப' |
| 33. திருப்புள்ளம் பூதங்குடி | ஒரு திருமொழி -5.1 | 'அறிவ தரியான்' |
| 34. திருக்கூடலூரர் | ஒரு திருமொழி - 5.2 | 'தாந்தம் பெருமை' |
| 35. திருவெள்ளறை | ஒரு திருமொழி -5.3 | 'வென்றி மாமழுவேந்தி' |

| | | |
|---|---|---|
| 36. திருவரங்கம் | ஐந்து திருமொழிகள் 5.4 முதல் 5.8 முடிய | 1. 'உந்திமேல்நான் முகனைப்படைத்தான்'<br>2. 'வெருவாதாள் வாய் வெருவி'<br>3. 'கைம்மான மழகளிற்றைக்'<br>4. 'பண்டைநான் மறையும்'<br>5. 'ஏழை ஏதலன்' |
| 37. திருப்பேர் நகர் | ஒரு திருமொழி -5.9 | 'கையிலங் காழி சங்கன்' |
| 38. திருநந்திபுர விண்ணகரம் | ஒரு திருமொழி -5.10 | 'தீதறு நிலத்தொடெரி' |
| 39. திருவிண்ணகர் | மூன்று திருமொழிகள் 6.1. முதல் 6.3 முடிய | 1 'வண்டுணும் நறுமலர்'<br>2. 'பொறுத்தேன் புன்சொல்'<br>3. 'துறப்பேன் அல்லேனின்பம்' |
| 40. திருநறையூர் | பத்து திருமொழிகள் 6.4 முதல் 7.3 முடிய | 1. 'கண்ணும் சுழன்று'<br>2. 'கலங்க முந்நீர்'<br>3 'அம்பரமும் பெருநிலனும்'<br>4. 'ஆளும் பணியும்'<br>5. 'பூண்கொண்ட தோல் மார்வில்'<br>6. 'பெடையடர்த்த மடவன்மை'<br>7. 'கிடந்த நம்பி'<br>8. 'கறவா மடநாகுதன்'<br>9. 'புள்ளாய் ஏனமுமாய்ப்'<br>10. 'சினஇல் செங்கண்' |
| 41. திருச்சேறை | ஒரு திருமொழி - 7.4 | 'கண்சோர வெங்குருதி' |
| 42. திருவழுந்தூர் | நான்கு திருமொழிகள் 7.5. முதல் 7.8 முடிய | 1. 'தந்தை காலில்'<br>2. 'சிங்கமதாய் அவுணன்'<br>3. 'திருவுக்கும் திருவாகிய'<br>4. 'செங்கமலத் திருமகளும்' |
| 43. திருச்சிறுபுலியூர் | ஒரு திருமொழி - 7.9 | 'கள்ளம்மனம் விள்ளும்வகை' |
| 44. திருக்கண்ணமங்கை | ஒரு திருமொழி - 7.10 | 'பெரும்புறக்கடலை' |
| 45. திருக்கண்ணபுரம் | பத்து திருமொழிகள் - 8.1. முதல் 8.10 முடிய | 1. 'சிலையிலங்கு பொன்னாழி'<br>2 'தெள்ளியீர் தேவர்க்கும்'<br>3 'கரையெடுத்த சுரிசங்கும்'<br>4. 'விண்ணவர் தங்கள்'<br>5. 'தந்தைகால் விலங்கற'<br>6. 'தொண்டீர் உய்யும்'<br>7. 'வியமுடை விடையினம்'<br>8. 'வானோர் அளவும்'<br>9. 'கைம்மான மதயானை'<br>10. 'வண்டார் பூமாமலர்' |

| | | |
|---|---|---|
| 46. திருக்கண்ணங்குடி | ஒரு திருமொழி - 9.1 | 'வங்கமா முந்நீர்' |
| 47. திருநாகை | ஒரு திருமொழி -9.2 | 'பொன், இவர்மேனி' |
| 48. திருப்புல்லாணி | இரண்டு திருமொழிகள் | 1 'தன்னை நைவிக்கெலன்' |
| | 9.3 முதல் 9.4 முடிய | 2. 'காவார் மடல்பெண்ணை' |
| 49. திருக்குறுங்குடி | இரண்டு திருமொழிகள் | 1. 'தவள இளம்பிறை' |
| | 9.5 முதல் 9.6 முடிய | 2. 'அக்கும் புலியின்' |
| 50. திருவல்லவாழ் | ஒரு திருமொழி -9.7 | 'தந்தைதாய் மக்களே' |
| 51 திருமாலிருஞ் சோலை | இரண்டு திருமொழிகள் | 1. 'முந்துற உரைக்கேன்' |
| | 9.8 முதல் 9.9 முடிய | 2. 'மூவரில் முன்முதல்வன்' |
| 52. திருக்கோட்டியூர் | ஒரு திருமொழி - 9.10 | 'எங்கள் எம்மிறை' |

மேலே விவரிக்கப்பட்ட பாடல்களை விடுத்து, மற்றப் பாடல்கள் தசரத இராமனின் பெருமைகள், கண்ணனின் பிறப்பு, வளர்ப்பு அவனுடைய திருவிளையாடல்கள், அவன் பக்தர்களின் துன்பங்களைப் போக்கும் விதங்கள் ஆகியவற்றைப் பற்றிப் பொதுவாக விவரிக்கின்றன. இவருடைய திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகிய இலக்கியங்கள் பக்தன் வீடு பேறு அடைய வேண்டும் என்ற ஏக்கத்தினால் அவன் நாயகி நிலையில் நின்று இறைவனை நாயகனாக்கி அவனது புகழைப் பாடுவதாக அமைந்துள்ளன இவருடைய திருவெழுகூற்றிருக்கை என்னும் இலக்கியத்தை ஆராயும்பொழுது அதில் உலகின் இயல்பு, இறைவனுடைய அவதாரப் பெருமை, அவனது திருமேனியழகு, அவன் பிராட்டிமார்களுடன் சேர்ந்திருக்கும் தன்மை ஆகியன பற்றியும் நப்பின்னை இறைவனான கண்ணனிடம் கொண்ட காதல் பற்றியும் திருக்குடந்தையின் இயற்கை வளங்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளன. இவ்வாழ்வாருடைய சிறிய, பெரிய திருமடல்களை நோக்கும்பொழுது இவர் பரகாலநாயகியாகி திருநறையூரானின் அழகில் மயங்கி அவனுடன் ஒன்று சேரவேண்டும் என்ற ஆசை மேலிட மடலெடுக்கத் துணிந்தமை சுட்டப்பட்டுள்ளது. ஆகவே இவருடைய இலக்கியங்களில் திருநாராயணனின் பூசைத்திருமேனியை வணங்கும் பாடல்களாக அமைந்துள்ள பெரிய திருமொழியின் முதல் ஒன்பது திருமொழிகளை மட்டும் ஆராய்ந்து, அதன்வழி இவ்வாழ்வாரது பக்தியின் திறத்தையும் அதனால் பெறப்படும் உண்மைகள் சமுதாய மக்கள் இன்பமாய் வாழ எவ்வழிகளில் பயனுடையதாய் அமைகின்றன என்பதையும் ஈண்டு விவரிக்கலாம்.

இவ்வாழ்வார் திருநாராயணன் பூசைத்திருமேனியாக உறையும் புண்ணிய நகரங்கள் தோறும் சென்று வணங்கும்பொழுது ஆங்குறையும் கோவில்களின் பெருமைகளையும், அவற்றின் இயற்கை வளங்களையும் விரிவாக எடுத்துரைக்கின்றார். இதனை நோக்கும்பொழுது இவர் இயற்கை வளங்களைக் காணும் பொழுது இவரிடம் இறையெண்ணம் மிக்கு நின்றமை தெளிவாகிறது.

ஆகவே சமுதாயத்தினரும் இயற்கை வளங்களை இறையெண்ணத்துடன் நோக்கும்பொழுது மனம் அமைதியுற்று வாழ்க்கையில் ஏற்படும் துன்பங்களை மறந்து விடுவர் என்று கொள்ளலாம். இந்நிலையில் இவர் திருவதரியாச்சிரமம் மற்றும் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் ஆகியவற்றின் இயற்கை வளங்களை,

" . . . . . . . . தவம்புரிந் துயர்ந்த
மாமுனி கொணர்ந்த கங்கையின் கரைமேல
வதரியாச் சிராமத்துள் ளானே" [3]

என்றும்,

"சிலையிலங்கு மணிமாடத் துச்சிமிசைச் சூலம்
செழுங்கொண்டல் அகடிரியச் சொரிந்தசெழு முத்தம்
மலையிலங்கு மாளிகைமேல் மலிவெய்தும் நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கமட நெஞ்சே"

என்றும் அழகாக விவரித்து, `இப்படிப்பட்ட வளங்களைக் கொண்ட புண்ணிய நகரங்களில் கோவில் கொண்டவனே! என்னை ஆட்கொள்வாயாக!' என்று இறைவனிடம் இறைஞ்சுகின்றார். இவ்வாழ்வார் நேரடியாகப் பூசைத் திருமேனியை வணங்குவதை விடுத்து அவ்வூர்களின் இயற்கை வளங்களைப் போற்றுவதன் வழியாகவும் ஆங்கு மறையவர்கள் யாகங்கள் செய்வதைச் சுட்டுவதன் வழியாகவும் பக்தர்கள் மற்றும் அவர் பாடல்களைப் படிப்பவர்கள் மனதை அவ்வூர்களின்பால் உள்ள பெருமைகளில் ஈடுபட வைத்து அமைதிப்படுத்தி பின் அங்கு இறையெண்ணத்தை ஊட்டுகின்றார் என்று இதற்கு விளக்கம் கூறலாம். இவ்வகையில் அமைந்த பாடல்களிலிருந்து அவ்வூர்களில் வாழும் மக்களுக்கு எவ்வித குறைகளும் இல்லை என்பதையும் பக்தர்கள் இறைமை வாழ்க்கை வாழ்ந்தால் அவர்களுக்கு அனைத்து நலன்களும் கிடைக்கும் என்பதையும் நாம் அறிந்து கொள்ளலாம். அத்துடன் இவ்வாழ்வார் இறைவன் குடிகொண்டிருக்கின்ற கோவில்களையும் அந்நகர்களின் மேன்மைகளையும் குறிப்பிடுவது அங்குப் பூசைத்திருமேனியாய் உறையும் இறைவனுக்குப் பெருமை சேர்ப்பதற்காகவே என்றும் நாம் எண்ணலாம்.

இறைவனின் பூசைத்திருமேனியை வணங்கும்பொழுது திருநாராயணனது கருணையின் மேன்மையை இவ்வாழ்வார் சிறப்புற எடுத்துக் கூறுகின்றார். திருமங்கைமன்னனது தனிப்பட்ட வாழ்க்கையே இதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றது. இவர் தன் இளம் வயதில் செய்யாத தீச்செயல்கள் இல்லை என்றும், அப்படியிருந்தும் இறைவன் தன்னை மன்னித்து அருள்பாலித்துள்ளான் என்றும், இவர் கூறும் கூற்று இறைவனது கருணையின் மாட்சிமையைத் தெளிவாக விளக்குகின்றது. இதனை இவ்வாழ்வார் நைமிசாரண்யத்தில் உறையும் பூசைத்திருமேனியை,

"சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து,
சுரிகுழல் மடந்தையர் திறத்து
காதலே மிகுத்துக் கண்டவா திரிந்த
தொண்டனேன் நமன்தமர் செய்யும்
வேதனைக் கொடுங்கி நடுங்கினேன்; வேலை
வெண்டிரை யலமரக் கடைந்த
நாதனே! வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசா ரணியத்துள் எந்தாய்!" [5]

என்று வணங்கும் பாடலில் எடுத்தியம்புகின்றார். மேலும் இவர் திருநாங்கூர் அரிமேய விண்ணகரத்துள் உறையும் பெருமானை,

"திருமடந்தை மண்மடந்தை யிருபாலும் திகழத்
தீவினைகள் போயகல அடியவர்கட் கென்றும்
அருள் நடந்துஇவ் வேழுலகத் தவர்பணிய வானோர்
அமர்ந்தேத்த இருந்தவிடம்" [6]

என்று வணங்கும்பொழுது இக்கருத்து தெளிவாக விளங்குகின்றது. ஆகவே வாழ்க்கையில் ஒருவன் மன்னிக்கமுடியாத பெருங்குற்றம் செய்திருப்பினும் அவன் மனம் திருந்தி திருநாராயணனிடம் பக்தி செய்தால் அவனை இறைவன் மன்னிப்பான் என்பது திண்ணம். மேலும் இறைவனை வணங்கி இறைமை வாழ்க்கை வாழ்கின்ற பக்தன் முடிவில் இறையுலகை சேருவான். இக்கருத்தினை இவ்வாழ்வார் திருநாங்கூர்ப் பார்த்தன்பள்ளியில் உறையும் பேரருளாளனை,

"கூர்கொள்நல்ல வேல்கலியன்
கூறுதமிழ் பத்தும்வல்லார்
ஏர்கொள்நல்ல வைகுந்தத்துள்
இன்பம்நாளும் எய்துவாரே" [7]

என்று கூறும்பொழுது தெளிவாக எடுத்தியம்புகின்றார்.

திருமங்கையாழ்வார் பூசைதிருமேனியை வணங்கும் பொழுது அதில் முழுமுதற்பொருளான திருநாராயணனைக் காண்கின்றார். அப்படிக் காணும் பொழுது இறைவன் அவ்வக்காலங்களில் எடுத்த திரு அவதாரங்களையும் அவற்றின் சிறப்புகளையும் எடுத்துக் கூறுகின்றார். அதுசமயம் பல அவதாரங்கள் எடுத்து நல்லவற்றைச் செய்து நல்லவர்களைக் காத்த நற்குணம் கொண்டவனே இங்கு இக்கோவிலில் பூசைத்திருமேனியாக நிற்கின்றான் என்று போற்றித் துதிக்கின்றார். இங்ஙனம் இவ்வாழ்வார் திருவெள்ளியங் குடியில் வாழும் திருவை வாழ்த்தி வணங்கும்பொழுது

"ஒள்ளிய கருமம் செய்வன்என் றுணர்ந்த
மாவலி வேள்வியில் புக்கு
தெள்ளிய குறளாய் மூவடி கொண்டு
திக்குற வளர்ந்தவன் கோயில்"

என்று கூறி மாவலியின் அகங்காரத்தைப் போக்குவதைப் போல பக்தர்களின் அகங்காரத்தைப் போக்குபவன் என்று கூறுகின்றார். இவர் திருநறையூரில் உறையும் திருவாளனை வணங்கும்பொழுது இராமாவதாரத்தை,

"தொன்னீ ரிலங்கை மலங்க இலங்கெரி யூட்டினான்
நன்னீர் நறையூர் நாம்தொழு தும், எழு, நெஞ்சமே!" [9]

என்று போற்றி இறைவன் தீச்செயல்களை செய்பவர்களை அழித்து விடுபவன் என்று அவனது நற்குணத்தைப் போற்றுகின்றார்

இவ்வாழ்வார் பூசைத்திருமேனியை வணங்கும்பொழுது இறைவன் குடிகொண்டுள்ள கோவில்கள் அமைந்துள்ள நிலப்பரப்பு எந்தத் திணையைச் சார்ந்தது என்பதையும் அத்திணைக்குரிய வகையில் தலைவனும் தலைவியும் சேர்ந்திருக்கும் முறையையும் சுட்டிக்காட்டி அதன்வழி தாம் இறைவனுடன் கொண்ட இணைப்பினை எடுத்தியம்புகின்றார். இவ்வகையில் இவ்வாழ்வார் திருப்பருதிநாதனை வணங்கும்பொழுது,

"விலங்கல் போல்வன விறலிருஞ் சினத்தன
வேழங்கள் துயர்கூர
பிலங்கொள் வாளெயிற் றரியவை திரிதரு
பிருதிசென் றடைநெஞ்சே!" [10]

என்று கூறுகின்றார். இதில் திருப்பிருதி குறிஞ்சித் திணையைச் சேர்ந்தது என்றும் அத்திணைக்கு உரிய துறையான புணர்தலும் புணர்த்தல் நிமித்தமும் வழி தலைவி தலைவனைச் சேருமாப்போலத் தாம் இறைவனிடம் சேருவதாக இவ்வாழ்வார் உருவகப்படுத்துகின்றார் என்று நாம் கருத இடமுண்டு. இவர் திருநறையூர் நம்பியைக் கண்டு போற்றும்பொழுது,

"பணிசேர் முல்லை பல்லரும்பப்
பானல் ஒருபால் கண்காட்ட
நனிசேர் கமலம் முகங்காட்டும்
நறையூர் நின்ற நம்பியே"

என்றும்,

"புள்ளார் புறவில் பூங்காவி
புலன்கொள் மாதர் கண்காட்ட
நள்ளார் கமலம் முகங்காட்டும்
நறையூர் நின்ற நம்பியே"

என்றும் மருதத்திணையின் பின்னணியான வயலும் வயல் சார்ந்த இடத்தின் சூழ்நிலையை விளக்கி அதன்வழி வெளிப்படும் ஊடலும் ஊடல் திறனும் என்ற நிலையில் தலைவி தலைவனைக் கண்டு கூடுதல் போன்று இவ்வாழ்வார் திருமகள்நாதனுடன் கூடி இறையின்பத்தை அனுபவிக்கின்றார்.

இவ்வாழ்வார் திருநாராயணனுடைய புகழைத் தாமே நேரடியாக ஆங்காங்குறையும் பூசைத்திருமேனியை வணங்கும்பொழுது எடுத்தியம்புகின்றார். அதுசமயம் தாம் பக்தனாகவும் திருநாராயணனைத் தாம் வணங்கும் இறைவனாகவும் இல்லாமல் இவர் பக்தி செய்கின்றார். இவ்வாழ்வார் இந்நிலையில் திருவட்டபுயகரப் பெருமானை வணங்கும் பொழுது,

"மலைகளும், மாமணி யும்மலர்மேல்
மங்கையும், சங்கமும் தங்குகின்ற
அலைகடல் போன்றிவர் ஆர்கொல்? என்ன
அட்ட புயகரத் தேன் என்றாரே" [13]

என்று திருநாராயணனுடைய புகழை நேரடியாகப் பாடுகின்றார். இது போலவே இவ்வாழ்வார் திருவரங்கத்தானை வணங்கும் பொழுது,

"உந்திமேல்நான் முகனைப் படைத்தான், உல குண்டவன
எந்தை பெம்மான் இமையோர்கள் தாதைக்கிடம் என்பரால்
சந்தி னோடு மணியும் தொழிக்கும்புனற் காவிரி
அந்தி போலும் நிறத்தார் வயல்சூழ் - தென் னரங்கமே" [14]

என்று அரங்கனின் புகழைப்பாடிப் பக்தி செய்கின்றார்.

இவ்வாழ்வார் இறைவனை வணங்கும்பொழுது தாம் இறைவனை எண்ணி ஏங்கும் நிலையைக் காதலன்பால் தன்னையே இழந்த காதலியின் நிலையாக எண்ணித் திருமாலிடம் பக்தி செய்கின்றார். இதன்வழி இவர் முதலில் இறையின்பத்தை எளிமையாக அனுபவிக்கின்றார். பின்னர் அவ்வின்பம் அவரது இறையீடுபாட்டினால் வலுப்பெறும் பொழுது அவர் தன்னிலையையே மறந்து விடுகின்றார். இவர் இறைவனை வணங்கும்பொழுது தம்மைக் காதலியாகப் பாவித்துக் காதலனான இறைவனுடன் கூடும் இன்பத்தைவிட அவனுடன் முதலில் கூடிப் பின் அவனை விட்டுப் பிரிந்த காதலி நிலையில் தம்மை நினைப்பதினால் இவ்வாழ்வார் இறையின்பத்தை அனுபவிப்பதில் முழு இன்பம்

கொள்ளுகின்றார் என்று கூறுதல் மிகவும் பொருந்தும்.[15] இவர் தாம் தலைவனைப் பிரிந்த தாபத்தினால் வண்டினை அழைத்து,

"பிணியவிழும் நறுநீல மலர்கிழியப் பெடையோடும்
அணிமலர்மேல் மதுநுகரும் அறுகால சிறுவண்டே
மணிகெழுநீர் மருங்கலரும் வயலாலி மணவாளன்
பணியறியேன்; நீசென்றென் பயலைநோய் உரையாயே"[16]

என்று கூறி தலைவனிடம் தூதுவிடும் தன்மையால் திருவாலியில் பூசைத் திருமேணியாய்க் கோயில்கொண்ட திருமகள்நாதனை வணங்கி தன் விரக தாபத்தை வெளியிடுகின்றார். இவர் இதே நிலையில் திருவழுந்தூர் உறை திவ்வியநாதனை,

"ஏடி லங்கு தாமரைபோல்
   செய்வாய் முறுவல் செய்தருளி
மாடு வந்தென் மனம்புகுந்து
   நின்றார் நின்ற ஊர்போலும்
நீடு மாடத் தனிச்சூலம்
   போழக் கொண்டல் துளிதூவ
ஆடல் அரவத் தார்ப்போவா"

என்று பாடித் தலைவன் தலைவி பிரிவால் கொண்ட விரக தாபத்தைப் பாடலில் காட்டி அதன் உள்ளீடாகத் தாம் பக்தனாகி இறையின்பத்தை அள்ளி மாந்துகின்றார்

இவர் திருநாராயணன் கிருட்டிணாவதாரத்தில் கண்ணனாக் கோகுலத்தில் வளர்ந்த முறையையும் அப்பொழுது அவன் நிகழ்த்திய அற்புதங்களையும் கூறி அப்படியெல்லாம் விளையாடிய கண்ணனே பூசைத் திருமேனியாக கோவில்களில் உறைகின்றான் என்று வணங்குகின்றார். இத்தன்மையதாய் இவர் திருக்கூடலூரில் குடிகொண்டுள்ள பெருமானை,

"பிள்ளை யுருவாய்த் தயிருண்டு அடியேன்
உள்ளம் புகுந்த ஒருவ ரூர்போல்"[18]

என்றும் இவர் திருவழுந்தூர் உறை நாயகனை,

"கறுத்துக் கஞ்சனை அஞ்ச முனிந்தாய்!
   கார்வண் ணா! கடல் போல்ஒளி வண்ணா!
இறுத்திட் டான்விடை யேழும்முன் வென்றாய்!
   எந்தாய்! அந்தரம் எழும்முன் ஆனாய்!"[19]

என்றும் வணங்கும் பாங்கு ஈண்டு சிந்திக்கத் தக்கதாகும்.

இவரிடம் இறைவன்பால் கொண்ட பக்தி கட்டுமீறிய நிலையில் இவர் பரகாலநாயகியாகி பூசைத் திருமேனியில் ஆயர்பாடி கண்ணனைக் கண்டு பேருவகை அடைகின்றார். இத்தன்மையில் இவர் திருக்கண்ணபுரம் பேராளனை,

"வாராளும் இளங்கொங்கை நெடும்பணைத்தோள் மடப்பாவை
சீராளும் வரைமார்வன் திருக்கண்ண புரத்துறையும்
பேராளன், ஆயிரம்பேர் ஆயிரவாய் அரவணைமேல்
பேராளர் பெருமானுக் கிழந்தேன் - என் பெய்வளையே" [20]

என்று நாயகன் நாயகி நிலையில் நின்று திருநாராயணனிடம் பக்தி செய்கின்றார்.

இவர் தலைவனின் பிரிவைத் தாங்காத நிலையில் பறவைகளைத் தூது விடுகின்றார். இப்படி இவர் திருப்புல்லாணி திருத்தேவனை வணங்கும்பொழுது,

"பொன்னங் கழிக்கானல் புள்ளினங்காள்! புல்லாணி
அன்னமாய் நூல்பயந்தாற் காங்கிதனைச் செப்புமினே" [21]

என்று புல்லினங்கள் வழி தூதுவிட்டுத் தன் மனக்குறையை இறைவனிடம் நேரடியாக எடுத்துக் கூறுகின்றார்

இவர் பிரளய காலத்தில் இவ்வுலகம் முழுமையும் திருநாராயணனது திருவயிற்றில் சென்று சேருகின்றது என்ற உண்மையைத் தன் பாடல்களின் உள்ளீடாக வைக்கின்றார். இவரது இக்கருத்து இவர் திருவேங்கடத்தானை வணங்கும்பொழுது,

"எண்தி சைகளும் ஏழு லகமும்
    வாங்கிப் பொன்வயிற் றில்பெய்து
பண்டொ ராலிலைப் பள்ளி கொண்டவன்" [22]

என்று திருநாராயணன் சிறு குழந்தையாய் நீர்மேல் மிதக்கும் ஆலிலையில் துயின்றக் காட்சியை அழகுற எடுத்துக் கூறி அதன் உள்ளீடாக மேற்கூறிய தத்துவத்தை வைத்து இறைவனை ஏற்றிப் பாடுகின்றார். இதேநிலையில், திருவிண்ணகர் சேயனைச் சிந்திக்கும் பொழுது,

"நிலவொடு வெயில்நில விருசுடரும்
உலகமும் உயிர்களும் உண்டொருகால்
கலைதரு குழவியின் உருவினையாய்
அலைகடல் ஆலிலை வளர்ந்தவனே!" [23]

என்று வணங்கி அதன் உள்ளீடாக இறைவனே இவ்வுலகமெனும் மாய உருவினன் ஆனான் என்று போற்றுகின்றார்.

இவர் திருநாராயணனை வணங்கி இன்புறும்பொழுது ஐம்புலன்களும் அவனது பெருமைகளை விளக்குவதால் இன்பங்களை முழுமையாக அனுபவித்து அதன்வழி மனம் அமைதியாகி அது இறைவன்பால் ஈடுபாடு கொள்ளும் திறத்தை அழுகுற எடுத்தியம்புகின்றார் திருநாராயணன் தன் ஐந்து புலன்களிலும் உறைந்து இன்பம் நல்குகிறான் என்பதை இவ்வாழ்வார் பரமேச்சுர விண்ணகரை வணங்கும்பொழுது,

"சொல்லுவன் சொல்பொருள் தானவை யாய்ச்
சுவையூறொலி நாற்றமும் தோற்றமுமாய்
*நல்லரன் நான்முகன் நாரணனுக்*
கிடம்தான்" [24]

என்று கூறுகின்றார் இவர் தில்லைச் சித்திரகூடத்தில் திருப்பள்ளி கொண்டிருக்கின்ற தேவராசனை வணங்கும்பொழுது மேற்கூறிய செய்தியினை எதிர்மறையாகக் கூறி அதன்வழி வந்தனம் செய்கிறார். மனிதன் ஐந்து புலன்களையும் கட்டுப்படுத்தாமல் அவற்றின் செயல்பாடுகளை இறைவழி செலுத்த வேண்டும் என்ற நிலையில்,

"ஊன்வாட உண்ணா துயிர்காவ லிட்டு
உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து
தாம்வாட வாடத் தவம்செய்ய வேண்டா -
தமதா இமையோ ருலகாள கிற்பீர்" [25]

என்று கூறி வணங்குவதை ஈண்டுச் சுட்டுவது பொருத்தமுடையது.

இவ்வாழ்வார் இறைவனை வணங்கும்பொழுது தாம் நாயகியாகித் தம் காதலின்பத்தை நேரடியாகத் திருநாராயணனிடம் தெரிவித்து அதன்வழி இறையின்பத்தை முழுமையாக அனுபவிக்கின்றார். இந்நிலையில் இவர் திருவாலி மணாளனை,

"வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப
நாணாளும் நின்னினைந்து நைவேற்கு ஓ! மண்ணளந்த
*தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த*
தோளாளா! என்தனக்கோர் துணையாளன் ஆகாயே!" [26]

என்று கூறி அவனிடம் பக்தி செய்கிறார். இதே நிலையில் இவர் திருக்கண்ணபுரத் தேவனை,

"மணமருவு தோளாய்ச்சி யார்க்கப்போய் உரலோடும்
புணர்மருதம் இறநடந்தாற் கிழந்தேன் - என்பொன்வளையே" [27]

என்று கூறி இறைவன் மேல் வைத்த காதலை விளக்குகின்றார்.

நாயகி-நாயகன் நிலையில் காதலியாக மாறிய இவ்வாழ்வார், தம் நாயகனான இறைவனிடம் அவன் செய்த செயல் குறித்து நேரடியாகச் செப்புவதை விடுத்து தன் தோழியிடம் முறையிடுதல் போன்று பாடிப் பூசைத் திருமேனியை வணங்கி மகிழ்கின்றார். இத்தன்மையில் இறைவனின் அழகில் மயங்கி இவர் திருநாகைத் திருவாளனை,

" . . . . . . . . . . . . . . . . . . தோழீ
என்னையும் நோக்கியென் னல்குல் நோக்கி
ஏந்திளங் கொங்கையும் நோக்குகின்றார்
அன்னையென் நோக்குமென் றஞ்சு கின்றேன்-
அச்சோ ஒருவர் அழிகியவா!" [28]

என்று போற்றித் துதி செய்கின்றார். இதே நிலையில் இவர் காதலியாகி திருக்குறுங்குடியுறை திருவாளனிடம் காதல் கொண்டமையைத் தன் தோழியிடம் கூறும்பொழுது,

"நாண்மடம் அச்சம் நமக்கிங்கில்லை
வல்லன சொல்லி மகிழ்வரேனும்
மாமணி வண்ணரை நாம்மறவோம்
கொல்லை வளர்இள முல்லைபுல்கு
குறுங்குடிக் கேயென்னை உய்த்திடுமின்" [29]

என்று போற்றி இறைவனுடன் தாம் இணைய ஆசை கொள்கின்றார்.

இவர் பரகாலநாயகியாகித் திருநாராயணனாகிய காதலனிடம் கொண்ட காதல் கட்டுமீறிய நிலையில் அதனை அவனிடம் நேரடியாகக் கூறமுடியாமையினால் பறவை, இளம்பிறை ஆகியன நோக்கி தம் வேதனையை எடுத்துக் கூறி அதன்வழி தம் மனதை அமைதிப்படுத்துகின்றார். இந்நிலையில் இவர் திருப்புல்லாணி உறை திருத்தேவனை வணங்குங்கால் பறவையை அழைத்து தான் காதல் வேதனையால் கண்ணீர் விட்டமையை,

"காவார் மடல்பெண்ணை அன்றில் அரிகுரலும்
ஏவாயி னூடியங்கும் எஃகில் கொடிதாலோ!
பூவார் மணங்கமழும் புல்லாணி கைதொழுதேன்
பாவாய்! இதுநமக்கோர் பான்மையே யாகாதே?"

என்று கூறித் தம் காதல் வேதனைக்கு வடிகாலிடுகின்றார். இவரது காதலின் பத்தால் இரவில் உறக்கும் இல்லாமல் நிலவு ஒளியினால் துன்பம் அடைந்தமையை,

'தேம்பல் இளம்பிறையும் என்தனக்கோர் வெந்தழலே"

என்று கூறி அதன்வழி தம் காதலானான இறைவனை, நினைவு கூர்வது இங்கு அறியத் தக்கதாய் உள்ளது.

திருமங்கையாழ்வார் தலைமகளது தாயாக மாறி தம் மகள் திருநாராயணனிடம் கொண்ட தீராத காதலால் படும் வேதனையைத் தமக்குத் தாமே கூறிக்கொள்கிறார். இந்நிலையில் தாய் தன் மகள் தலைவனுடன் உடன்போக்கிச் சென்றமை குறித்து வருந்தும் முறையில்,

"மாதவன் தன் துணையா நடந்தாள்தடஞ் சூழ்புறவில்
போதுவண் டாடுசெம்மல் புனலாலி புகுவர்கொலோ?" [32]

என்று கூறித் திருவாலி மணாளனை வணங்கி அதன் உள்ளீடாகத் தாம் இறைவனுடன் கொண்டுள்ள பிடிப்பின் மேன்மையை அழகுபட எடுத்துக் கூறுகின்றார். மேலும் தாயாகிய திருமங்கையாழ்வார் தம்மகள் தலைமகனை என்றும் நினைத்துக் கொண்டே இருப்பதை,

". . . . . . . தென்திசைக்குத்
திலகம்அன்ன மறையோர் நாங்கைத்
தேவதேவன் என்றென்றோதி
பலரும்ஏச என்மடந்தை
பார்த்தன்பள்ளி பாடுவாளே

என்று சுட்டி இறையெண்ணத்தைத் தம் மனதில் எழுச்சி பெறச் செய்கின்றார்.

இவ்வாழ்வாராகிய தாய், தம்மகள் தலைமகனான இறைவனிடம் கொண்டுள்ள காதலினால் படும் வேதனையைத் தாங்கமாட்டாமல் அது குறித்து மற்றவர்களிடம் குறைகூறுதலை விடுத்துத் திருநாராயணனிடமே முறையிடும் வகையில் பூசைத்திருமேனியை வணங்குகின்றார். இவர் திருவிடவெந்தை நாதனை,

"மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னாம்;
வளைகளும் இறைநில்லா என்றன்
ஏந்திழை யிவளுக் கென்நினைந் திருந்தாய்?
இடவெந்தை யெந்தை பிரானே!" [34]

என்று கூறி இறையின்பத்தின் எல்லைக்கே செல்கின்றார்.

இவ்வாழ்வார் தத்துவக் கருத்துக்களைப் பாடலின் உள்வைத்து அதன் வழி பூசைத்திருமேனியை வணங்குகின்றார். இந்நிலையில் இவர் மனித உடம்பு அழியக் கூடியது என்றும் உடல் அழிந்து போவதற்கு முன்னால் திருநாராயணனிடம் பக்தி செய்து வழிபட்டுப் பரமபதம் சேர வேண்டும் என்றும் கூறுகின்றார். இக்கருத்தின் அடிப்படையில் இவர் திருவதரியில் உறைகின்ற பூசைத்திருமேனியை வணங்கும்பொழுது யாக்கை நிலையாமையை மனதில் கொண்டு,

"பீளை சோராக் கண் இடுங்கிப் பித்தெழ மூத்திருமி
தாள்கள் நோவத் தம்மில் முட்டித் தள்ளி நடவாமுன்
காளை யாகிக் கன்று மேய்த்துக் குன்றெடுத் தன்றுநின்றான்
வாளை பாயும் தண்த டஞ்சூழ் வதரி வணங்குதுமே"

என்று கூறி இவ்வுடம்பிலுள்ள உயிர் பிரியாமுன் திருமாலை வணங்கி உய்ய வேண்டும் என்று கூறுகின்றார்

இவ்வாழ்வார் பூசைத்திருமேனியை வணங்கும்பொழுது அறியாமையைப் போக்கி இறையுண்மையை அறிந்து கொள்ள வேண்டும் என்கின்றார் இவ்வாறாக இவ்வாழ்வார் திருவேங்கடத்தானை வணங்கும்பொழுது குருதி பெருகப் பிறரால் தாக்கப்பட்ட ஒருவன் வேந்தன்பால் சென்று தன் குறையைக் கூறித் தனது துகிலிற் படிந்துள்ள செந்நீர்க்கறையைக் காட்டுமாப்போல இருவினைகள் தாக்கப்பட்டுள்ள குறையைக் கூறித் தம்மனமாகிய துகிலிற் படிந்துள்ள அறியாமை என்னும் செந்நீர்க்கறையைக் போக்கிட,

"பற்றேல் ஒன்றுமிலேன்; பாவமேசெய்து பாவியானேன்
மற்றேல் ஒன்றறியேன் மாயனே!எங்கள் மாதவனே!
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன்; அடியேனையாட் கொண்டருளே" [36]

என்று வேண்டுகின்றார்.

இவ்வாறாக, திருமங்கையாழ்வார் பூசைத்திருமேனியை வணஙகும் முறை அவர் பாடிய பாடல்களின் போக்கு, அப்பாடல்களில் காணும் பொருள்நயம் ஆகியவற்றைத் தீர்க்கமாய் ஆராயும்பொழுது, இவர் போன்று சமுதாயத்தினர் அனைவரும் இவர் காட்டிய வழிகளில் ஏதாவது ஒன்றின் வழியாக இறைவனை வணங்கினால் உறுதியாக அவர்கள் இறையின்பத்தை அனுபவிக்க முடியும் என்பது உறுதி.

# முடிவுரை

திருமங்கையாழ்வார், திருநாராயணன் உலகம் கடந்தும் அதன் உள்ளீடாகவும் இரண்டு நிலைகளில் இருக்கின்றான் என்கின்றார் இறைவன் பரவாசுதேவ நிலையில் தன் திருநாட்டில் திருப்பாற்கடலில் ஆதிசேடன் என்னும் நாகப்படுக்கையில் நித்திய முத்தர்களும், முக்தர்களும் புடைசூழ இலக்குமி, பூமாதேவி ஆகிய தன் இரு மனைவியர்களுடன் நன்மை-தீமை, வெற்றி-தோல்வி என்னும் இருவேறுபட்ட குணங்களைத் தாண்டி அனைத்து மங்கள குணங்களுடன், யோகநிட்டை என்னும் ஆனந்தமான உறங்கா உறக்கத்தில் உலக நிகழ்வுகளையெல்லாம் சாட்சியாக இருந்து கவனித்து வருகின்றான் இறைவன் தன் இரண்டாவது நிலையில் வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சை என்னும் நான்கு தன்மைகளில் சமுதாயத்துடன் ஒன்றுபட்டு இருக்கின்றான் திருநாராயணன் வியூகமாகி வாசுதேவன், சங்கர்சணன், அனிருத்தன், பிரத்தியும்னன் என்று முறையே உயிர்களைக் கட்டுப்படுத்துதல் உலகின் அழிவை முறைப்படுத்துதல், உலகின் தோற்றத்தை நெறிப்படுத்துதல், உலகில் தோன்றியதை நிலைப்படுத்துதல் ஆகிய செயல்களைக் கண்காணிக்கின்றான்; விபவமாகி உலகில் பல அவதாரங்கள் எடுத்து நீதியையும் அதனைக் கடைப் பிடிப்பவர்களையும் அவ்வப்பொழுது காப்பாற்றுகின்றான்; அந்தரியாமியாகி உலகின் உயிருள்ள உயிரற்ற பொருள்களின் உள்ளீடாக இருக்கின்றான்; அர்ச்சையாகித் தான் விரும்பும் புண்ணிய நகரங்களிலுள்ள திருக்கோயில்களில் பூசைத்திருமேனியாக எழுந்தருளிப் பக்தர்களைத் தன்பால் ஈர்த்து அவர்களுக்கு வீட்டுநிலையைக் கொடுக்கின்றான். இவ்வாழ்வார் இவ்விரு நிலைகளிலும் இறைவன் மக்களின் உள்ளீடாக இருக்கும் நிலையையே மிகவும் விரும்பி ஏற்று உலகத்தோர் அனைவருக்கும் வேண்டிய செல்வங்களை நல்கி அவர்களை இறைநிலைக்கு உயர்த்துகின்றான் என்று கூறுகின்றார்.

இவ்வாழ்வார் பரமன் மக்களின் எண்ணம், பேச்சு, செயல் ஆகியவற்றின் உள்ளீடாக இருக்கும்பொழுது அவன் போற்றத்தகு பல குணநலன்களைக் கொண்டிருக்கின்றான் என்று அவற்றைத் தம் இலக்கியங்களின் வாயிலாக விளக்குகின்றார் இவர்வழி இறைவன்

உலகத்தோர் அனைவருக்கும் பொதுவானவனாகவும் தன்னிடம் அன்பு செலுத்தும் பக்தர்களுக்கு உதவிகள் செய்பவனாகவும் இருக்கின்றான்; உயிரற்ற, உயிருள்ள உலகத்துப் பொருள்களாக மாறியிருக்கின்றான்; ஊழிக்காலத்தில் உலகப் பொருள்களைத் தூல நிலையிலிருந்து சூட்சமமாய் மாற்றி அவற்றைத் தன்னுள் ஒடுக்குகின்றான்; உலகம் மீண்டும் பரிணமிக்கும்பொழுது அவை தூலமாக விரியக் காரணமாகின்றான்; அறிவு என்ற நிலையில் வேதமாகவும், உபநிடதங்களாகவும் உலகில் வெளிப்படுகின்றான்; மக்கள் நல்வினை பெற்றிருப்பின் நேரடியாகவும் தீவினை கொண்டிருப்பின் திருத்தி மறைமுகமாகவும் தன் திருக்கருணையால் வீட்டுநிலையை அருள்கின்றான். இறைவன் உலகத்தோர் அகங்காரத்தால் அதிகாரவேட்கை கொள்வதையும் தன்னலம் பேணுதலையும் தடுத்து அவர்களை அன்பின்வழிப் பொதுநலத்தில் ஈடுபட வைக்கின்றான்; அவதாரங்கள் எடுத்துச் சமுதாயத்தில் அல்லவற்றை அழித்து, நல்லவற்றைக் காக்கின்றான். திருமங்கையாழ்வார் செப்பும் மேற்கூறிய திருமகள்நாதனின் இறையிலக்கணங்களைச் சமுதாயப் பார்வையில் நோக்குமிடத்து இறைவன் உலக நலன்களுக்கு வழிகாட்டுபவனாகவும் அவர்களுக்கு உதாரண புருசனாகவும் இருப்பதை அறிந்து மக்கள் அனைவரும் தங்களிடமுள்ள குறைகளைக் களைந்து சான்றோர்களாகி இவ்வுலகிலும் இறையுலகிலும் எவ்விதச் சிக்கலுமின்றி இன்பமாய் வாழுதல் வேண்டும் என்ற உண்மை தெளிவாகின்றது.

ஒருவன் தன் வாழ்க்கையில் இந்து சமயம் வகுத்துக் கொடுத்த வருணாசிரமக் கொள்கையைச் சமுதாய வாழ்க்கையின் மாற்றம் காரணமாகவும் விஞ்ஞான வளர்ச்சியில் அவனது அன்றாடத் தேவைகள் பெருகிவிட்டதாலும் அவன் அழியும் பொருட்களின்பால் கொள்ளும் பற்றுதலை விட முடியாமையாலும் அவனது வாழ்க்கை அறநெறிப்படி கட்டுப்பாட்டிற்குள் இல்லாததாலும் கடைப் பிடிக்க முடியவில்லை. மனிதன் இறைவனை அறிந்து கொள்வதே தன் வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை மறந்து, அதற்காக இந்து சமயம் வகுத்துக்கொடுத்த கர்ம, ஞான, பக்தி போன்ற வழிகளில் ஏதாவது ஒன்றினைக் கடைபிடிக்க தவறி விட்டான். அவன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் வாழ்க்கையின் நான்கு உண்மை முடிவுகளையும் அடைய முற்படாமல், பொருளையும் இன்பத்தையுமே அடைவது குறிக்கோள் என்று எண்ணுகின்றான். ஒருவன் அனைத்து நலன்களையும் எவ்விதத் தடைகளுமின்றிப் பெற்று இறைவனை முன்னிருத்தி ஆன்மீக வாழ்க்கை வாழ முடியாமல், தனது அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, இடம் ஆகியவற்றிற்கே போராடுகின்றான் ஒருவனுடைய உள்ளார்ந்த மன உந்துதலும் அவனுடைய விருப்பமும் ஒன்று சேர்ந்து நேர்வழியில் அவனது அன்றாட வாழ்க்கையுடன் இணையாமல் போய்விடுவதால் அவன் மனம் எப்பொழுதும் சஞ்சலத்துடன் அமைதியிழந்தே இருக்கின்றது. ஒருவன் தற்சார்பு, தன்னம்பிக்கை, உழைப்பு ஆகிய உயரிய பண்புகளைப் பெற்றிருப்பினும் சமுதாயச் சீர்கேடுகளால் அவன்

தன் வாழ்க்கையில் கைக்கொண்ட காரியத்தில் தோல்வியையே தழுவுகின்றான். சமுதாயத்தில் ஒருவனுக்குச் சுதந்தரம் தடைப்பட்டு அவன் விரும்பும் சமயத்தைத் தழுவ முடியாமலும் மேற்கொள்ளும் தொழிலைச் செம்மையாகச் செய்ய முடியாமலும் போய்விடுகின்றன சமூகத்தில் அனைவருக்கும் கிடைக்கவேண்டிய அடிப்படை வசதிகளும், வாய்ப்புகளும் கிடைக்காமல் போய்விடுவதால் அங்கு பிரிவினைகள் தோன்றி அமைதியான வாழ்க்கைக்கு இடையூறுகள் ஏற்படுகின்றன. ஒரு சிலருக்குச் சுயநலம், பொறாமை போன்ற தீய குணங்கள் இயற்கையாகவே இருப்பதால் சமுதாயத்தில் சமதர்ம வாழ்க்கையும், தோழமை மனப்பான்மையும் தடைப்படுகின்றன. ஒருவன் மற்றவர்களைத் துன்புறுத்தியும் ஏமாற்றியும் வாழ்வதால், அவன் சமுதாயத்திற்கு ஒரு நோயாக மாறிவிடுகின்றான். அவன் மனதைக் கட்டுப்படுத்தி வாழ்க்கையில் நம்பிக்கை கொண்டு இன்ப துன்பங்களைச் சம நோக்கில் பார்க்காமல் தினமும் பல இடர்ப்பாடுகளை எதிர்கொள்ளுகின்றான் ஒருவன் உண்மையையும் தன்னம்பிக்கையையும் தன் இரு கண்ணெனக் கொண்டு, தன்னில் மற்றவர்களையும், மற்றவர்களில் தன்னையும் காணும் மனப்பக்குவம் கொள்ளாததால், தன் வாழ்க்கையில் மற்றவர்களைவிட்ப் பின்தங்கி விடுகின்றான்.

திருமங்கையாழ்வார் ஒருவன் தன் வாழ்க்கையில் எவ்விதச் சிக்கல்களும் இன்றி வாழ அவன் கடைப்பிடிக்க வேண்டிய அடிப்படைக் குணநலன்களைப் பலவாறக எடுத்துரைக்கின்றார் இவ்வாழ்வார் ஒருவன் உண்மையைத் தன் வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் கடைப்பிடிப்பவனாகவும் பிற உயிர்களை எக்காரணத்தைக் கொண்டும் துன்புறுத்தாதவனாகவும் இருக்க வேண்டும் என்று கூறுகின்றார். மனிதன் இறைவனை முன்வைத்தும், அருள்நெறி காட்டும் மறை நூல்கள் மற்றும் அறநூல்களைக் கற்றும், அவற்றில் கூறியுள்ள உண்மைகளைத் தன் வாழ்க்கையில் கடைப்பிடித்தும் வாழ வேண்டும் என்று இவர் கூறுகின்றார். ஒருவன் பிறப்பினாலும், சுற்றுப்புறச் சூழலாலும் தீய குணங்களைப் பெற்றிருப்பினும், அவன் இறைவனை வணங்கி நன்னெறிகளைக் கடைப்பிடித்தால் அவனும் முடிவில் நல்லவனாக மாறிவிடுவான் என்று இவர் கட்டுரைக்கின்றார். அத்துடன் இவர் மனிதன் தன்னையே இறைவனிடம் முழுமையாக ஒப்படைத்துத் தன் வாழ்க்கையில் எதிர்ப்படும் அனைத்துச் சோதனைகளையும் தன்முயற்சியாலும் இறையருளாலும் சாதனைகளாக்கி, அவன் வாழ்க்கையில் முன்னேறுவான் என்று செப்புகின்றார். இவர் ஒருவனுக்கு எதனையும் தியாகம் செய்யும் மனநிலை ஏற்படின் அதனால் அவன் மனம் விரிவடைந்து ஆன்மநேயம் பெருகி இறைவனை உணரும் நிலைக்கு உயருவான் என்கின்றார். மனிதன் தன்முனைப்பு எண்ணத்தின் வெளிப்பாடாய் அமையும் மதிக்கொள்கையையும் இறைவனால் அனைத்தும் முடிவுறுத்தப்பெறுகின்றன என்னும் விதிக்கொள்கையையும் ஒன்றினுள் ஒன்றை இணைத்து உலகில் அனைத்து நிகழ்ச்சிகளும் இறைவனின் திருவிருப்பத்தினாலேயே நடக்கின்றன என்ற பேருண்மையை அறிந்து

அவ்வுண்மையின் அடிப்படையில் அனைத்துச் சிக்கல்களையும் எதிர்கொண்டு அவற்றை வென்று வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்று மனிதனுக்கு அறிவுரை வழங்குகின்றார். இதற்கு மனிதன் பிரபத்தியால் தன்னையும், தன் செயலையும், அதனால் விளையும் பயன்களையும் இறைவனிடமே ஒப்படைத்து வெற்றியால் ஆணவத்தையும், தோல்வியால் சோர்வையும் அடையாமலிருக்கும் மனவலிமையைப் பெற்றிருக்க வேண்டும் என்று பறைசாற்றுகின்றார்.

மனித குலத்தில் அரசியல், பொருளாதாரம், சமூகம், சமயம் ஆகிய துறைகள் செம்மையான முறையில் நடைபெறாததால் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. உலகில் இரண்டு சமுதாயங்களுக்கிடையே நட்புறவு இல்லாததாலும் ஒன்றையொன்று சரியாகப் புரிந்து கொள்ளாததாலும் வல்லரசுகள் தோன்றி உலக அமைதிக்கு இடையூறுகள் ஏற்பட்டுள்ளன மனிதர்களில் ஒரு சிலர் தீய நோக்கங்களையும் சீர்கேடு விளைவிக்கும் பழக்கங்களையும் கடைப்பிடிப்பதால் மனித வாழ்க்கை சாதிக்கொடுமை பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், போதைப் பொருள்களின் தாக்கம் ஆகிய குறைகள் நிறைந்ததாக மாறி விட்டது. ஒரு நாடு பொருளாதார வளர்ச்சிக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்து அறக்கோட்பாடுகளைக் கைவிடுவதால் அங்குள்ள மக்களிடையே எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்ற மனநிலை வளர்ந்து, சமுதாயக் கட்டுக்கோப்பு நிலை குலைந்து விடும் ஒரு சமுதாயத்தில் ஏற்படும் சிக்கல்களை மக்கள் சரியான முறையில் கணித்து அவற்றிற்கு உடனுக்குடன் தீர்வு காண முற்படல் வேண்டும். இல்லையேல் அவை மேலும் மேலும் வளர்ந்து சமுதாயத்தில் பல உட்சிக்கல்களை உருவாக்கி விடும். ஒரு நாட்டை ஆளும் அரசு தனி மனிதனுக்கோ ஒரு குழுவிற்கோ முக்கியத்துவம் கொடுக்காமல், மக்கள் அனைவரையும் ஒரே நிலையில் வைத்து சமதர்மச் சமுதாயத்தைப் படைக்கப் பாடுபட வேண்டும். மக்கள் அனைவரும் தங்கள் வாழ்க்கையில் நாகரிகத்தையும் பண்பாட்டையும் உயிரென மதித்திடல் வேண்டும், ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம் என்ற கொள்கையை முழுமூச்செனக் கடைப்பிடித்தல் வேண்டும்.

வாழ்க்கையின் அணுகுமுறைகள் காலத்திற்குக் காலம் மாறிக்கொண்டே இருக்கும் திறத்தன. அங்ஙனம் மாறும் அணுகுமுறைகள் மக்கள் வாழ்க்கை முறையை உயர்த்த உதவுமெனில் ஏற்றும், இல்லையேல் மறுத்தும் ஒதுக்கிவிடல் வேண்டும். ஒரு நாடு கடைப்பிடிக்கும் விதிமுறைகள் ஒரு காலத்தில் ஏற்புடையதாய் அமைந்தும் அதற்கு அடுத்த காலகட்டத்தில் சரியானவையாக அமையாமலும் போய்விட இடமுண்டு. ஆகவே, சமுதாயம் கடைப்பிடிக்கும் வழிமுறைகளை அப்பொழுதைக்கப்பொழுது மக்களின் மனநிலைகளுக்கு ஏற்றாற்போல மாற்றிச் சமுதாயம் முன்னேற்றப் பாதையில் நடைபோட உதவும் வண்ணம் அமைத்துக் கொள்ள வேண்டும். ஒரு சமுதாயத்திலே உள்ள இரண்டு குழுக்கள் ஒற்றுமை, ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளுதல், மனிதனை

மனிதன் மதித்தல் ஆகிய நற்குணங்களால் ஒன்றுபட்டு அவர்களுக்கிடையே ஏற்படும் எந்தச் சிக்கல்களாலும் உடனுக்குடன் தீர்த்துக் கொள்ள வேண்டும்

போதைப் பொருட்களுக்கு அடிமையானவர்களாலும் இளம் வயதிலேயே சிறு சிறு குற்றங்களைச் செய்பவர்களாலும் சமுதாயத்தின் அமைதிக்குக் களங்கம் ஏற்படும். ஆகவே அவர்களுக்குக் கல்வி நிறுவனங்களும் மக்கள் சேவை நிறுவனங்களும் வாழ்க்கையின் உண்மைகளைப் போதித்து நல்வழிப்படுத்தி, அவர்களையும் சமுதாயத்துடன் இணைத்துக் கொள்ள வேண்டும். மேலும் விஞ்ஞான வளர்ச்சி, பொருளாதார முன்னேற்றம் ஆகியவற்றின் அடிப்படையில் ஒரு நாடு மற்ற நாடுகளுடன் காழ்ப்புணர்ச்சி கொள்ளுதல் கூடாது. அப்படிக் காழ்ப்புணர்ச்சிகள் கொள்ளினும், இறைவன் முன் அனைவரும் சமம் என்ற உயரிய கருத்தின் அடிப்படையில் அவ்விரு நாடுகளும் ஒன்று சேர்ந்து மற்ற நாடுகளை உயர்த்திட உதவிகள் செய்ய வேண்டும்

சமுதாயத்தின் உள்ளீடாக ஏற்படும் சிக்கல்களை, திருமங்கையாழ்வாரது பனுவல்களைப் பகுத்து அவற்றிலிருந்து தகுந்த அறக்கருத்துகளை பெற்றுச் சரியான முறையில் தீர்த்து வைக்க இயலும். இந்நிலையில் இவ்வாழ்வார் சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும் இறை வாழ்க்கையை மேற்கொண்டு அதன் பின்னணியாக இருக்கும் நீதி, நேர்மை, உண்மை, பிற உயிர்களைக் கொல்லாமை, பொருள்களின்மீது அதிகப் பற்றுதல் வைக்காமை ஆகிய நன்னெறிகளைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்கின்றார் இதனால் தனி மனிதனும், தனி ஒரு சமுதாயமும் மேன்மையுற்று முடிவில் உலகம் அளாவிய நிலையில் மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு எவ்விதச் சிக்கல்களும் இன்றி மனிதாபிமானத்தின் அடிப்படையில் இன்பமாய் வாழ்வார்கள்.

இவ்வாழ்வாரைத் திருநாராயணன் ஆட்கொள்ளுமுன் இவர் செய்யாத தீச்செயல்கள் இல்லை இருப்பினம் இவருக்கு இறையருள் கிடைத்த பின்னர் தம் வாழ்க்கையை இறைவன் புகழை உலகத்தோருக்கு எடுத்தியம்புவதற்காகவும், மற்றவர்களுக்கு உதவிகள் செயவதற்காகவுமே செலவிட்டார் இதனை ஒவ்வொருவரும் அறிந்து கொண்டால் மனித வாழ்க்கை உலகில் பிறருக்கு உதவிகள் செய்வதற்காகவே கிடைக்கப்பெற்றது என்பதை அவர்கள் உணருவர் இக்கருத்து சமுதாயம் முழுமைக்கும் பரவினால் மக்களிடையே ஒருவருக்கொருவர் உதவிடும் மனப்பான்மை வளர்ந்து, அவர்கள் தியாக வாழ்க்கை வாழ்ந்து முடிவில் குறைகளே இல்லாத ஆன்மீகச் சமுதாயம் மலரும் இந்நிலையில் உலக நாடுகள் அனைத்தும் ஒரே மனித குலம் என்றும் மக்கள் எண்ணுவர். அதனால் உலக மக்கள் என் சகோதரர்கள், இறைவனை உணர்வதே மனிதனின் உள்நோக்கம், தீயவற்றை ஒதுக்கி நல்லவற்றைச் செய்வதே உண்மைச் சமயம் என்ற மனப்பாங்கு உலகத்தோரிடையே தோன்றி அவர்கள் அனைவரும் ஒற்றுமையாக வாழ்வார்கள்.

சமுதாயத்தை மக்கள் எப்படித்தான் மாற்றியமைத்தாலும் அங்கு ஏற்படும் குறைபாடுகளையும் இடர்ப்பாடுகளையும் அறவே ஒழிக்க முடியாது. உலகில் இடம், காலம், மனிதனின் ஆசாபாசங்கள் ஆகியவற்றாலும் இயற்கையாக உலகில் தர்மம் அழிந்து, அதர்மம் தலைதூக்கி சமுதாய வாழ்க்கை கலைந்து எப்படித்தான் வாழுவது என்று மக்கள் கதிகலங்கித் தள்ளாடும் பொழுதும் இறைவனே தன் முழுமையான அன்பின் வெளிப்பாடாகத் தன் திருக்கருணையால் அவதாரமெடுத்து உலகை நெறிப்படுத்தி மக்கள் இப்படித்தான் வாழவேண்டுமென்று வழிகாட்டுகின்றான். இறைவனே உலகில் பிறந்து தீயவற்றை அழித்து நல்லவற்றைக் காத்து தானே வாழ்க்கையின் அனைத்துச் சிக்கல்களையும் ஏற்று சான்றோனாக வாழ்ந்து காட்டி மற்றவர்களுக்கு முன்னுதாரணமாக விளங்குகின்றான். திருநாராயணனின் அவதார நோக்கத்தினை மக்கள் அனைவரும் புரிந்து கொண்டால் அவர்கள் நீதிநூல்களைக் காத்து அவை சுட்டும் நெறிப்படி வாழ்வார்கள். இறைவன் நம்முடன் இருந்து நமக்கு வழிகாட்டுகின்றான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் மனவலிமை பெற்றால், மக்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைத் தாண்டி வெற்றி பெறுவார்கள். இறைவனே அவதாரத்தின் மூலம் தீயவற்றை அழித்து நல்லவற்றைக் காக்கின்றான் என்ற நிலையில் ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையில் தீயவற்றை அழித்து, நல்லவற்றையே செய்வர்.

உலகோருக்கு எளிமையாகக் காட்சி கொடுக்கவும் அவர்கள் பக்தியால் வீட்டுநிலை அடையவும் திருநாராயணன் தான் விரும்பிய புண்ணிய திருநகரங்களிலுள்ள கோயில்களில் பூசைத்திருமேனிகளாக இருக்கின்றான். இவர் இறைவனை வணங்கும்பொழுது அவன் குடிகொண்டிருக்கும் கோயில்கள் அமைந்திருக்கும் புண்ணியத் திருநகரங்களின் இயற்கை வளங்களைப் போற்றுகின்றார். இதனை நோக்கும்பொழுது இவர் இயற்கை அழகைக் காணும் பொழுதெல்லாம் இவரிடம் இறையெண்ணம் மிக்கு நின்றமை தெளிவாகிறது. ஆகவே பக்தர்களும் இவரைப் போலவே அழகை எங்கெங்கெல்லாம் எப்பொழுதெல்லாம் பார்க்கின்றார்களோ அப்பொழுதெல்லாம் அவர்கள் மனம் அமைதியுற்று வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களை மறந்து இறைவனை நினைத்து இன்புறுவர்.

இவ்வாழ்வார் நாராயணனைப் போற்றிப் பாடும்பொழுது மனித வாழ்க்கையில் நடைபெறும் அனைத்துச் செயல்களும் இறைவனால் கட்டுப்படுத்தப்பெறுகின்றன என்ற கருத்தைத் தெளிவாக்குகின்றார். அத்துடன் உலக நிகழ்ச்சிகள் அனைத்தும் இறைவனின் திருவிருப்பத்தின் வழியே நடக்கின்றன என்ற உண்மையையும் வெளிப்படுத்துகின்றார். ஆகவே மக்கள் அனைவரும் இறைவனை முன்வைத்து தங்கள் வாழ்க்கையை அமைத்து எதையும் தாங்கும் இதயம் கொண்டு அமைதியான வாழ்க்கை வாழ வேண்டும்

இவர் இறைவனை வணங்கும்பொழுது அவன் பெருங் கருணையுடையவானக இருப்பதால் பக்தன் குற்றம் புரியினும் அதனை இறைவனிடம் முறையிட்டால் அவன் நிச்சயம் பக்தனை மன்னிப்பான் என்ற கருத்தினை வெளியிடுகின்றார். இவரைப் போலவே மக்கள் அனைவரும் இறைவனை வணங்குவார்களாயின் அவர்கள் தங்கள் வாழ்க்கையில் தவறி ஏதாவது குற்றம் செய்திருப்பினும் இறைவனிடம் மன்னிப்பைப் பெற்று நேர்மையான வாழ்க்கை வாழ்வார்கள்.

இவ்வாழ்வாருடைய பாடல்களைப் பார்க்கும்பொழுது இவர் இந்தியா முழுவதும் குறிப்பாகத் தென்னிந்தியா முழுவதும் உள்ள கோயில்களைப் பாடியுள்ளமை அறியப்பெறுகின்றது. அதுசமயம் தமிழ்நாட்டின் நில அமைப்பான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைகளின் அமைப்பு முறைகளை அழகுற எடுத்துக் கூறுகின்றார். மேலும் அத்திணைகளுக்குரிய செயல்கள் முறையே கூடுதல், ஆற்றியிருத்தல், ஊடுதல், இரங்கல், பிரிதல் ஆகியவற்றைத் தன் நாயகன்-நாயகி வழி அமைந்த பாடல்களில் வெளிப்படுத்துகின்றார். ஆகவே மக்கள் எந்த நிலப்பரப்புகளில் வாழ்ந்தாலும், எந்த மனித சூழ்நிலைகளில் இருந்தாலும் எந்த மன நிலைகளைக் கொண்டிருந்தாலும், இறைவனை வணங்கி இறைவாழ்க்கை வாழலாம் என்ற கருத்து இங்கு பெறப்பெறுகின்றது. அத்துடன் சமுதாயம் நிலஅமைப்பு, வாழ்க்கை முறை ஆகியவற்றால் வேறுபட்டாலும் அவர்கள் அனைவரும் இறை வாழ்க்கை வாழ முடியும்.

இவ்வாழ்வார் கோயில்களில் உறையும் கருப்பகிருகத்தானை வணங்கும் பொழுது, இறைவனின் இதிகாச புராண காலச் சிறப்புகளைக் கூறி, அவற்றின்வழி அவனது வீர தீர பராக்கிரமச் செயல்களை நினைவில் கொண்டு அத்தகைய சிறப்புக்களையுடைய இறைவன் இக்கோயிலில் குடிகொண்டுள்ளான் என்றும், அவனே என்னைக் காப்பாற்றுவான் என்றும் துதிபாடுகின்றார் இதே முறையில் சமுதாயத்தினர் அனைவரும் திருநாராயணனை வணங்குவார்களாயின் அவர்கள் எளிதாக இறையானந்தத்தை முழுமையாக அனுபவித்து வாழ்க்கைத் துன்பங்களை வெற்றிகொள்வர்.

இவருடைய பூசைத்திருமேனிகளை வணங்கும் புனுவல்களை ஆராயும் பொழுது அதில், எல்லாம் இறைவன் செயல் என்ற உண்மையும், உலகம் அவனிடமே தோன்றி ஒடுங்குகின்றது என்ற உண்மையும் வெளிப்படுகின்றன இவரைப் போலவே மற்றவர்களும் இறைவனை வணங்கின் அவர்கள் இறைவனின் பெருமைகளையும், அவன்முன் தன்னுடைய சிறுமைகளையும் உணர்ந்து கொள்வர். இந்த எளிய தத்துவத்தை உணர்ந்து சமுதாயத்தினர் அனைவரும் வாழ்ந்தால் அவர்கள் இவ்வுலக வாழ்க்கையிலும் இறையுலக வாழ்க்கையிலும் மேன்மையடைவார்கள்.

மனிதன் தன் உள்ளத்து உணர்ச்சிகள் முழுவதையும் இறைவனிடம் பக்தி செய்யும்பொழுது நேரடியாக வெளிப்படுத்த முடியாது. ஆனால் அவற்றை உலகியலில் இயல்பாக நடைபெறும் செயல்களின் உள்ளீடாக வைத்து இறைவன் முன் பாடி இன்புற முடியும். இந்நிலையில் இவ்வாழ்வாரது நாயகன்-நாயகி முறையில் அமைந்த பாடல்களைத் துணையாகக் கொண்டு அவற்றை இறைவன் முன் பாடி ஒருவன் திருநாராயணனிடம் கொண்ட பக்தியின்பத்தை முழுமையாக அனுபவிப்பவனாவான்.

இவர் பூசைத்திருமேனியை வணங்கும் பாடல்களில், மனித உடம்பின் நிலையாமையை உணர்த்திச் சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும் உயிர் உடம்பில் இருக்கும் காலத்திலேயே நல்லறிவையும் நல்வினையையும் பெற்று இறைவனுடைய விருப்பப்படி வாழவேண்டும் என்று அறிவுறுத்துகின்றார் இவ்வுண்மையைச் சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும் கடைப்பிடிப்பார்களாயின் அவர்கள் நிச்சயம் நன்கு வாழ்வார்கள்

இறைவனை உள்ளத்தில் நீக்கமற நிறைய வைத்து அவனை வழிபடுதல் என்பது அனைவராலும் முடியாது. அதே சமயம் அவனது வீரதீர சாகசங்களை எடுத்துக் கூறுவதால் பக்தனுக்கு இறைவன்பால் ஈடுபாடு ஏற்பட்டு இறையெண்ணம் கிட்டும் ஆகவே திருமங்கையாழ்வார் தம் பாடல்களில் கூறியுள்ள இறைவனுடைய மேன்மைகளை நினைவு கூர்வதால் இறையானந்தத்தை எளிமையாக அருந்த முடியும். இவ்வழியினை சமுதாயத்தினர் அனைவரும் எவ்வித வேறுபாடுமின்றி பின்பற்ற முடியும்.

இவ்வாழ்வாரது பூசைத்திருமேனியை வணங்கும் பனுவல்களைப் படிக்கும் பொழுதும், இறைவன் முன் பாடும்பொழுதும், அவற்றைப் பிறர் பாடக் கேட்கும் பொழுதும், பக்தர்கள் உலகத் துன்பங்களை மறந்து விடுவர். மனிதன் புலன்களின்வழி உலக இன்பங்களை அனுபவிப்பதை விடுத்து, அவற்றை இறைவழி செலுத்தி பேரின்பம் காணின் அவன் இறைவனை எளிதில் உணர்ந்து இன்புறுவான். மேலும் அதன்வழி ஐம்புலன்களும் மனமும் அமைதியுற்று அதனால் அவனுடைய புத்தி, சித்தம் ஆகியனவும் கட்டுப்பாட்டிற்குள் இருக்கும் அதனால் அவனுடைய அகங்காரம் அழிந்து பின் ஆன்மாவை உணர்ந்து அழியாத பேரின்பம் கொள்வான்

நாயகன்-நாயகி நிலையில் இவ்வாழ்வார் இறைவழிபாடு செய்யும் பொழுது இவர் நாயகியாகி இறைவனான தன் காதலனிடம் கொண்ட தம் காதல் உணர்வைக் குளவி, நாரை, காகம், கொக்கு, செம்போத்து மற்றும் தென்றல், இளம்பிறை ஆகியவற்றிடம் வெளிப்படுத்துகின்றார். இதனை ஆராயும்பொழுது இவர் உலகில் உயிருள்ள, உயிரற்ற பொருள்களில் இறைவனைக் கண்டு அவற்றிடம் உறவாடியமை புலப்படுகின்றது.

இக்கருத்தை இரண்டு நிலைகளில் விளக்கலாம்: (அ) திருமங்கையாழ்வார் பறவை இனங்களையும் சடப்பொருளான **தென்றல்,** இளம்பிறை போன்றவற்றையெல்லாம் பார்க்கும்பொழுது அவற்றில் அந்தர்யாமியாகக் குடிகொண்டிருக்கும் ஸ்ரீமன் நாராயணனையே கண்டார். (ஆ) அவர் அவற்றைப் பார்க்கும்பொழுதெல்லாம் தம் மனம் கனிந்து நாம் எம்பெருமானுடைய திருவருளுக்குப் பாத்திரமாகி அவன் தம்மை ஆட்கொள்ளவில்லையே என்று ஏங்கினார். ஆழ்வார் நாயகி நிலையிலான இத்தகு ஏக்கத்தின் விடியலாக அவற்றையே ஸ்ரீமன் நாராயணனிடம் தூதுவிட்டு அவனைத் தன்னை நாட வைத்து அல்லது தாம் அவனை நாடி ஆன்மீகமாக இறைக்கருணைக்குப் பாத்திரமாக நனிவிரும்பினார் என்று கருதலாம். ஆழ்வார் ஸ்ரீமன் நாராயணனிடம் தூது விடுதல் என்ற ஒரு உக்தியை ஊடகமாகக் கொண்டு அதன் ஊடாக தாம் எம்பெருமான்மீது கொண்ட பக்தியை வெளிப்படுத்தி, அதன்வழி இறைவனுடைய நினைவில் பேரானந்தம் கொண்டார் இவற்றின் உள்ளீடாக சமுதாய நிலையில் ஓர் உண்மையை உணரலாம். ஆழ்வார் உயிருள்ள - உயிரற்ற பொருள்களைப் பார்க்கும் பொழுது அவற்றை அன்னியமாக வேற்றுமைக் கண்யோட்டத்தில் நோக்காமல் அவற்றின் வழியாக இறைவனைக் கண்டார். இவரது பாடல்களின் இப்படியான உட்கருவைச் சமுதாயத்தினர் அறியின் அவர்களும் அனைத்து உயிர்களையும் ஒருயிரென்னும் உள்ளப் பாங்கு ஏற்பட்டு அவற்றில் இறைவனைக் கண்டு மேலும் மேலும் பக்குவம் பெற்று இறைநிலைக்கு உயருவர்

இவ்வாழ்வார் பூசைத்திருமேனியை வணங்கும் பாடலகளில் பெரியோருக்கு மரியாதை கொடுத்தல், பொறுமையின் பெருமை, புலனடக்கத்தின் மேன்மை, உணர்ச்சிகளைக் கீழான தன்மைக்குத் தள்ளப்படாதிருத்தல், 'நான்' என்னும் அகங்கார எண்ணத்தைக் கைக்கொள்ளாமலிருத்தல், எதிலும் பற்றில்லாமல் இறைவனிடமே எல்லாப்பற்றையும் கொண்டிருத்தல் ஆகிய நல்லொழுக்கங்களின் மேன்மை வெளிப்படுகின்றது. இவரது பாடல்களால் உலகின் அனைத்துச் செயல்களும் இறைவனால் முடிவெடுக்கப்படுகின்றன என்ற உண்மையை அறிவதுடன் மனிதன் பிறப்பிலிருந்து இறப்பு வரை ஏதாவது ஒரு செயலைச் செய்து கொண்டே இருக்க வேண்டும் என்பதும், அவன் அச்செயலைச் செய்யும் பொழுது அதனால் விளையும் பயனைப்பற்றிச் சிறிதும் எண்ணக்கூடாது என்பதும், அதன் பயன் இறைவனால் செயலைச் செய்தவனிடமே சென்று சேர்க்கப்படும் என்பதும் தெளிவாக விளங்குகின்றன.

பக்தியைச் சகுண பக்தி, நிர்க்குண பக்தி என்று இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம். சகுண பக்தி என்பது இறைவனுடைய கலியாண குணங்களைப் போற்றி பேரின்பம் கொள்வது நிர்க்குண பக்தி என்பது இறைவனிடம் குணமற்றத் தன்மையில் பக்தி கொள்வது. இதில் முதலில் கூறிய பக்தியை அறிவுடையவர்களும் மனம் பண்பட்டவர்களும் மட்டுமே கடைப்பிடிக்க முடியும்

இந்நிலையில் இவ்வாழ்வார் முதலாவதாகக் கூறிய பக்தியின் எளிமையை முன்வைத்து அதன்வழி பூசைத்திருமேனியை அனைவரும் வணங்கி பயனடையும் வகையில் தன் பாடல்களை அமைத்துள்ளார். இவ்வழியைச் சமுதாயத்தில் அறிவுடையோர் அறிவில்லாதவர்கள் என்ற வேறுபாடும், உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பாகுபாடும் இல்லாமல், ஆங்காங்குள்ள கோவில்களில் உறைகின்ற இறைவனின் பூசைத்திருமேனியை வணங்கி இறையின்பம் அனுபவிக்க முடியும்.

இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் தங்கள் வாழ்நாளில் முடிந்த நேரங்களில் தவறாமல் புண்ணியத் திருப்பதிகளுக்குச் சென்று அங்கிருக்கும் கோயில்களில் பூசைத்திருமேனியாய் உறையும் இறைவனைக் கண்டு பக்தி செய்யும் வழக்கமுடையவராய் இருக்கின்றனர். இதில் வயது, இனம், மொழி ஆகியன அடிப்படையில் எவ்வித வேறுபாடுகளும் இல்லை. அங்ஙனம் பூசைத்திருமேனியைக் கண்டு பக்தி செய்யும்பொழுது ஆன்றோர்கள் அத்திருமேனியைப் போற்றும் பனுவல்களைப் பாடிக்கொண்டே வணங்கின் பக்தனது மனம் மேலும் மேலும் பண்பட்டு சமுதாயப் பண்பாடும் ஓங்கும். ஆகவே மக்கள் திருமங்கையாழ்வார் பாடல்களைத் துணையாகக் கொண்டு இவர் சென்று வந்த புண்ணிய நகரங்களுக்குச் சென்று ஆங்குறையும் மூர்த்தியை வணங்கின், பக்திப் பரவசம் பொங்கி இறைவனை முழுமையாக எளிதில் உணரமுடியும்.

இவ்வாழ்வார் முன்மொழியும் வழிபாட்டைப் பக்தன் முழுமையாக அறிந்து கொண்டால், அவன் உலகப் பொருள்களின்பால் கொள்ளும் பற்றுக் குறைந்து இறைவன்பால் கொள்ளும் ஆசை மிகும். பக்தன் இறைவழிச் செல்வதால், உலகியலை விட்டு முழுவதும் ஒதுங்கியிருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியதில்லை. ஆனால் பக்தன் இறையெண்ணத்துடன் தன் வாழ்க்கையை நடத்தினால் அவன் உலகியல் முன்னேற்றத்தையும் ஆன்மீக முன்னேற்றத்தையும் ஒருங்கு பெறுவான்.

இவ்வாழ்வார் பூசைத்திருமேனியை வணங்கும்பொழுது அதன் உள்ளீடாக அன்பு என்னும் எண்ணம் பெருகிடும் மகத்துவத்தை அனைவரும் அறிவர்; அதனால் உயிருள்ள பொருளாகட்டும் உயிரற்ற சடப்பொருளாகட்டும் அனைத்திலும் இறைவன் இருக்கின்றான் என்ற உண்மையை அவர்கள் எளிதில் உணருவர். இவ்வுணர்வே சமுதாயத்தில் சகோதரத்துவ மனப்பான்மையினை உருவாக்கி அங்கு ஒருவருக்கொருவர் செய்து கொள்ளும் சேவைகள் இறைவனுக்குச் செய்யும் சேவையாக எண்ணி மக்கள் ஒட்டுமொத்தமாக இன்புறுவர் உலகில் மனிதன் செய்யும் செயல் எதுவாக இருப்பினும் அதனை இறையெண்ணத்துடன் செய்தால் அதுவே இறைவனிடம் பக்தி செய்வதாக அமைகின்றது. மக்கள் இறைவனை முன்வைத்து அவன் நினைவிலே அனைத்துச் செயல்களையும் செய்வதாலும், செய்யும் செயல்களின்

விளைவுகளை இறைவனுக்கே அர்ப்பணிக்கும் மனப்பக்குவம் ஏற்படுவதாலும், அவர்களுக்கு ஆன்மீக அறிவு ஏற்பட்டு சமுதாய உணர்வு முதிர்ந்து முடிவில் இறைநிலை அடைவார்கள். இவ்வாறு பெறும் முழுமை வேறு எந்தச் சமுதாயக் கொள்கையினாலும் பெறமுடியாது என்பதே ஆழ்வார் காட்டிய சமுதாய நோக்கின் நிறைந்த பெருமையாகும்.

## எண் குறிப்புகள்

### அதிகாரம் - 1

| | | | |
|---|---|---|---|
| 1 | திருநெடுந்தாண்டகம் | - | 14 |
| 2 | பெரிய திருமொழி | - | 2 1 2 |
| 3 | " | - | 4 .3 . 2 |
| 4. | " | - | 2 . 3 . 2 |
| 5. | சிறிய திருமடல் | - | 8 |
| 6. | பெரிய திருமொழி | - | 1 1 9 |
| 7 | " | - | 3 4 1 |
| 8 | " | - | 3 8 4 |
| 9 | " | - | 4 10 3 |
| 10 | " | - | 3 . 2 3 |
| 11 | " | - | 4 1 2 |
| 12 | " | - | 6 4 1 |
| 13 | " | - | 6 . 1 5 |
| 14 | " | - | 5 5 . 9 |
| 15. | " | - | 1 2 . 9 |
| 16 | " | - | 1 3 . 10 |
| 17 | " | - | 8 . 10 . 10 |
| 18 | " | - | 11 . 4 10 |
| 19 | " | - | 6 . 3 . 4 |
| 20 | " | - | 9 . 6 9 |
| 21 | " | - | 1 1 10 |
| 22. | " | - | 2 . 3 8 |
| 23. | " | - | 8 . 5 . 7 |
| 24. | " | - | 5 . 3 4 |

### அதிகாரம் - 2

1. Arora. V.K., *The Social and political philosophy of Swami Vivikananda*, Punthi pustak, Calcutta-4. 1968. p.87
2. Jha. Anirudha., *Social philosophy of Bertrand Russell*, Ajanta Publications, Delhi, 1978, p.52-64.
3. Arora, V.K., op.cit, pp.88-90.

4. Ibid, pp.90-92

5. Ibid, pp.92-95

| | | | |
|---|---|---|---|
| 6. | பெரிய திருமொழி | - | 1 1 . 5 |
| 7 | ” | - | 7 7 2 |
| 8 | ” | - | 4 4 . 8 |
| 9 | ” | - | 5 . 9 9 |
| 10. | ” | - | 6 . 1 . 9 |
| 11. | ” | - | 10 . 2 1 |
| 12 | ” | - | 10 2 . 2 |
| 13 | ” | - | 1 1 10 |
| 14 | பெரிய திருமடல் | - | 15, 16, 17 |
| 15 | பெரிய திருமொழி | - | 7 7 8 |
| 16 | புறநானூறு | - | 192 |
| 17 | திருவெழு கூற்றிருக்கை | - | அடிகள் 46, 47 |
| 18 | பெரிய திருமொழி | - | 5 1 10 |
| 19. | ” | - | 10 9 10 |
| 20. | ” | - | 7 7 |
| 21. | ” | - | 3 5 1 |
| 22 | ” | - | 10 2 5 |
| 23 | ” | - | 3 9 10 |

**அதிகாரம் - 3**

1. **Jha**, **Anirdudha**., op.cit., pp.26 - 28.

2. **Ibid, pp.148-150**

3. **Weinberg Martin**, S.A., & Others, *The Solution of Social* ***problems***, Oxford University Press, New York, 1981. pp.87- 94.

4. **Jha Anirdudha**. **op.cit. pp.1-11**

5. **Weinberg Martin, S.A., & Others, op.cit. pp.174-182.**

6. **Wilson Bryan.** ***Religion in Sociological Perspectives***, **Oxford University press. Oxford, 1983. pp.121-131**

7. **Jha Anirdudha. op.cit, pp.52-55**

8. Weinberg Martin, S.A., & Others, op.cit., p.18.

9 ஆழ்வான் பெரிய திருமொழிக்கு எழுதிய தனியன்

10 பெரிய திருமொழி - 1 . 2 . 10

11. " - 1 9 . 9

12 " - 3 . 10 10

13 " - 10 3 . 1

14. " - 10 . 6 . 10

15 திருக்குறுந்தாண்டகம் - 11

16 பெரிய திருமொழி - 5 8 . 1

17 " - 5 . 8 . 2

18 " - 2 . 3 . 2

19 " - 9 . 9 . 6

20 " - 1 . 1 . 7

21 " - 1 3 8

22 " - 1 7 10

23 " - 1 . 6 . 1

24 " - 2 . 3 . 10

25 " - 5 8 . 10

26 " - 6 2 4

27 " - 3 10 1

28 " - 7 . 4 9

29 " - 11 3 9

அதிகாரம் - 4

1 Hasting, James., (Edi-m-chief) *Encyclopedia of Religion and Ethics*, Volume.7, Charles Scribner's Sons, New York, 1956. pp.193-197.

2 பகவத் கீதை - 4, 7

3 பாகவத புராணம் - 7 - 9 - 37, 10 - 16 - 40, 10 - 13 - 61, 10 - 27 - 11.

4 பெரிய திருமொழி - 2 . 5 . 3; 8 . 4

5 பாகவத புராணம் - 8 . 24

6 திருநாராயணன் மச்ச அவதாரம் எடுத்ததை `மச்ச' என்னும் சொல்லிற்குப் பொருள் கண்டு அதன் தத்துவத்தை அறியலாம். `மச்ச'

என்னும் சொல்லிற்கு இரண்டு பொருள்கள் உண்டு: 1. எவன் பக்தனின் குற்றங்களையும், குறைகளையும் போக்கி வீட்டு நிலைக்கு வழி காட்டுகின்றானோ அவன் மச்சயன். 2 எவன் தமது பக்தர்களுக்கு இன்பத்தை வழங்குகிறானோ அவன் மச்சயன் மாத்யதி லோகறை அனென, இதி மத் + சியன் இவ்விரு கருத்துக்களையும் நோக்கும்பொழுது திருநாராயணன் பக்தனைக் காத்து வீட்டு நிலையைக் காட்டுவதால் அவனை மச்சன் என்று கூறுதல் பொருந்தும்.

**Siddhantasastree, Rabindrakumar, *Vaisnavism Through the Ages*, Munshiram Manoharlal Publishers, pvt., Ltd., 1965, p.51.**

| | | | |
|---|---|---|---|
| 7 | வாயு புராணம் | - | 29 . 50 |
| 8 | பெரிய திருமொழி | - | 6 . 8 2 |
| 9. | " | - | 6 . 1 . 3 |
| 10 | " | - | 11 4 1 |
| 11 | இயசுர் வேதம் | - | 24/34 & வாயு புராணம் - 3511 |
| 12 | சதபத பிராமணம் | - | 7 5 . 1 5 |
| 13 | மார்க்கண்டேய புராணம் | - | 58 |
| 14 | பெரிய திருமொழி | - | 5 . 3 . 6 |
| 15. | " | - | 8 . 8 . 2 |
| 16 | " | - | 11 4 . 2 |
| 17 | பாகவத புராணம் | - | 3 13 |
| 18. | விட்டுணு புராணம் | - | 1 . 4 . 9 & வாயு புராணம்- 1 4 . 32 |
| 19 | " | - | 14 . 33 - 34 |
| 20. | பெரிய திருமொழி | - | 1 . 1 . 4 |
| 21. | " | - | 3 . 1 . 1 |
| 22. | " | - | 5 . 3 . 5 |
| 23. | பாகவத புராணம் | - | 7 |

24. நரசிம்ம அவதாரத்தின் பின்னணியில் உண்மையாக நடந்த ஒரு வரலாற்று நிகழ்ச்சி உள்ளது என்றும் அதனைக் கதையாக எழுதியவர்கள் தங்கள் கற்பனையை அத்துடன் இணைத்து விட்டார்கள் என்றும் அறிவுலகம் கருதுகின்றது. இக்கதையின்படி, `நரசிம்மம்' என்னும் சொல், மனிதர்களில் சிறந்தவன் என்ற பொருளைச் சுட்டும். கிரேதா யுகத்தில் இரணியன் என்னும் மன்னன் இந்தியாவின் இன்றைய பகுதியான காசுமீரத்தை ஆண்டு வந்தான். அவன் பிராமணர்கள் கடைப்பிடித்த வேத இந்து மதத்தை வெறுத்து ஒதுக்கினான். அம்மதத்திலுள்ளவர்களில் சிறந்தவனும், நரசிம்மம் என்ற அடைமொழி

கொண்டவனுமான பிராமணன் ஒருவன் இரணியனுடன் போரிட்டு அவனைக் கொன்றான், பின்னர் பிரகலாதனை அந்நாட்டை ஆளப்பணித்தான்.

Siddhantasastree, Rabindrakumar., op.cit, pp. 56-58.

25. பெரிய திருமொழி - 1 . 2 . 4
26. " - 2 . 3 . 8
27. " - 8 . 8 . 4
28. இருக்கு வேதம் - 1 . 154 . 1, 1 . 155 . 5
29. பாகவத புராணம் - 8 . 15, 23
30. திருநாராயணனின் வாமன அவதாரத்தின் பின்னணியில் வேறு ஒரு கதையும் உண்டு என்று அறிஞர்கள் கருதுகின்றார்கள். திருநாராயணன் வாமனனாக மாபலியிடம் மூன்றடி மண் கேட்டது மூன்று கேள்விகள் கேட்டதாகக் கொள்ளலாம். அவை உலகியல் தொடர்புடையது, சமயச் சடங்குகள் தொடர்புடையது, உயிர்கள் தொடர்புடையது என்று கொள்ளலாம். அவற்றில் முதல் இரண்டு கேள்விகளுக்கு மாபலியும், அவனைச் சார்ந்தவர்களும் பதில் கூறிவிட்டனர். ஆனால் மூன்றாவது கேள்விக்கு அவர்களால் பதில் சொல்ல முடியவில்லை. ஆகவே மாபலி யின் உயிர் வாமனனுக்கு அடிமை பூண வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனால் வாமன அவதார நிகழ்ச்சி கதையாகவோ உண்மையாக நடந்தவையாகவோ இருக்கலாம். ஆனால் பொதுவாக மாபலி வேத இந்து மதத்தை அழித்து ஒடுக்கியமையையும், திருநாராயணன் வாமன அவதாரம் கொண்டு அச்சமயத்தைக் காத்தமையையும் அறிவுலகம் ஏற்கும்.

Siddhantashastree, Rabindrakumar, op.cit, pp.61-62

31. பெரிய திருமொழி 1 . 5 . 6
32. " 3 . 4 . 1
33. திருஎழுகூற்றிருக்கை அடிகள் 6 - 9

34. Siddhatashastree, Rabindrakumar, op.cit, pp.62-67

35. பெரிய திருமொழி - 3 . 2 . 5
36. " - 6 . 7 . 2
37. திருநெடுந்தாண்டகம் - 7
38. பாகவத புராணம் - 9 . 10 . 11
39, பெரிய திருமொழி - 2 . 2 . 2
40. திருக்குறுந்தாண்டகம் - 15

41. பெரிய திருமடல் - 97, 98, 99 கண்ணிகள்
42. Siddhatashastree, Rabindrakumar, op.cit, pp.75-76
43. பெரிய திருமொழி - 1 . 3 . 1
44. " - 7 . 3 . 4
45. " - 8 . 5 . 1
46. " - 10 . 1 . 7

அதிகாரம் - 5

1. கோவிந்தராச முதலியார், கா.ர. *ஆழ்வார்கள் வரலாறு* (இரண்டாம் பாகம்), திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை, 1975, பக்.71.

2. ஞானசுந்தரம், தெ. *பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும்*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984, பக்.12

3. பெரிய திருமொழி - 1 . 4 . 8
4. " - 3 . 9 . 4
5. " - 1 . 6 . 3
6. " - 3 . 10 . 1
7. " - 4 . 8 . 10
8. " - 4 . 10 . 7
9. " - 6 . 4 . 6
10. " - 1 . 2 . 2
11. " - 6 . 7 . 2
12. " - 6 . 7 . 3
13. " - 2 . 8 . 5
14. " - 5 . 4 . 1
15. Hardy, Friedheln. *Viraha - Bhakti*, Oxford University Press, Delhi, 1983, pp.372-373
16. பெரிய திருமொழி - 3 . 6 . 2
17. " - 7 . 5 . 6
18. " - 5 . 2 . 3
19. " - 7 . 7 . 7
20. " - 8 . 3 . 9
21. " - 9 . 4 . 2
22. " - 1 . 8 . 6
23. " - 6 . 1 . 4
24. " - 2 . 9 . 1
25. " - 3 . 2 . 1

| | | | |
|---|---|---|---|
| 26. | " | - | 3 . 6 . 5 |
| 27. | " | - | 8 . 3 . 4 |
| 28. | " | - | 9 . 2 . 1 |
| 29. | " | - | 9 . 5 . 6 |
| 30. | " | - | 9 . 4 . 1 |
| 31. | " | - | 9 . 4 . 8 |
| 32. | " | - | 3 . 7 . 4 |
| 33. | " | - | 4 . 8 . 8 |
| 34. | " | - | 2 . 7 . 3 |
| 35. | " | - | 1 . 3 . 4 |
| 36. | " | - | 1 . 9 . 9 |

## உசாத்துணை நூல்கள்


Akilananda, Swami, *Modern problems and Religion*, Bruce Humphries publishers, Boston, 1964.

Arora, V.K. *The Social and political philosophy of Swami Vivekananda*, Bharatiya Book Corporation, Delhi, 1968.

Brodoo, V. *Indian Philosophy in Modern Times*, progress pub lishers, Moscow, 1984.

Chattopodhyay, Santinath. *The Universal Man: Tagore's Vision of the Religion of Humanity*, Naya Prakash, Culcutta, 1987.

Daya Krishna. *Social philosophy*, Indian Institute of Advanced study, Simla, 1969.

Devaraja, N.K. *Humanism in Indian Thought*, Indus publishing Company, New Delhi, 1988.

Edward, Paul. (Ed). *The Encyclopedia of philosophy*, Volume Seven, Macmillan publishing Company, New York, 1967

Feaver H. Clayton and Others. *Religion and philosophical and Cultural perspectives*, Van Nostrand Reinhold Company, London, 1971.

Ghurye. *Religious Consciousness*, popular prakashan, Bombay, 1965.

Govindacharya, Alkondavalli. *Holy Lives of the Azhvar or the Dravida Saints*, Ananthacharya Indological Research Institute, Bombay, 1982.

Hardy, Friedheln. *Viraha-Bhakti*, Oxford University Press, Delhi, 1983

Hasting, James. *Encyclopaedia of Religion and Ethics*, Vol.10, Vol.11, Charles Scribner's Sons, New York, 1956.

Juergensmeyer, Mark. *Religion as Social Vision*, University of California Press, London, 1982.

Preston, Ronald, H. *Religion and the perspectives of Capitalism* SCM press Ltd., London, 1979.

Radhakrishnan, S. *Religion and Culture*, Orient paper Backs, Vision Book pvt. Ltd. Delhi. 1968.

Raghuvir Singh. *Religion and Culture of North Eastern India*, Abinav publications, New Delhi, 1977.

Rajendra Pandy. *Sociology of Youth*, Sterling publishers private Limited, New Delhi, 1984.

Siddhantasastree, Rabindrakumar. *Vaisnavism Through the Ages*, Munshiram Manoharlal publishers pvt. Ltd., New Delhi, 1985.

Sinha, Jadunath. *Moral Idealism and Theism*, Jadunath Sinha Foundations, Calcutta, 1978.

Sreedhar Menon, A. *Social and Cultural History of Kerala*, Sterling Publishers pvt. Ltd., New Delhi. 1979.

Srivastva. A.K. *God and its Relation with the Finite Self in Tagore's philosophy*, Oriental publishers & Distributors, Delhi, 1976.

Taylor Richard, W. *Society and Religion*, The Christian Literature Society, Madras, 1976.

Vigasin, A.A. & Samoyvantsev, A.M. Society, *State and Law in Ancient India*, Sterling Publishers private Limited, New Delhi, 1985.

Vireswarananda, Swami. *Religion and National Integration*, Sri Ramakrishna Math, Madras, 1976.

Weinberg Martin, S.A. & Others. *The Solution of Social Problems*, Oxford University Press, New York, 1981.

Wilson Bryan. *Religion in Sociological perspectives*, Oxford University Press Oxford, 1983.

கோவிந்தராச முதலியார், கா.ர. *ஆழ்வார்கள் வரலாறு* (இரண்டாம் பாகம்), திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை, 1975

*ஆழ்வார்கள் வழிக்குரவர் வரலாறு* (இரண்டாம் பாகம்), திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை, 1975.

ஞானசுந்தரம், தெ, *பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும்*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984,

நாராயணவேலுப்பிள்ளை, எம். *சமயச் சான்றோர்கள்*, ரேவதி பதிப்பகம், சென்னை, 1982.

வீரராகவாச்சாரியன், ஸ்ரீஉத்தமூர் தி. *உபயவேதாந்த க்ரந்தமாலை*, பெரிய திருமொழி (பிரபந்தரக்ஷை என்னும் உரையுடன்) பாகம் 1 - 10, விசிஷ்டாத்துவித ப்ராசாரிணீ சபை, சென்னை, 1980.

வேங்கடசாமி ரெட்டியார், சி. (பதிப்பாசிரியர்) *நாலாயிர திவ்வியப் பிரபந்தம்*, திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை, 1981.